# கல்கி

KALKI 23.1.2005
ரூ.6.00

## நட்பு ஸ்பெஷல்!



அட ...
இதென்ன கலாட்டா?

# மீரா யாத்திரை

அமரர் **கல்கி**





வானதி பதிப்பகம்

**மீரா யாத்திரை; தாகூர் தரிசனம்; அதிர்ஷ்ட கவசம்**

*“கல்கி” எழுதிய நூல்கள் அறிமுகம்*

தலைமை : மாண்பமை நீதியரசர் திரு.**கே.எஸ்.பக்தவத்ஸலம்**

**வானதி பதிப்பகம் அன்புடன் அழைக்கிறது**

ஜனவரி 22, 2005 சனிக்கிழமை, மாலை 6.00 மணி
ருஷ்ய கலாசார மையம், 74, கஸ்தூரிரங்கா சாலை,
ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.

# கல்கி

23.1.2005



பரத்தின் எனர்ஜி சீக்ரெட் - 56-58



அடக்கணுமா?
அங்கீகரிக்கணுமா? - 8-11

## நீங்கள் விரும்பித் தேடும் பக்கங்கள்



சதா சொல்றதெல்லாம்
தூளு - 48,49

# வீட்டமேஜை

✉ சுஜாதாவின் தொடர் ஆரம்பமே ஜிகு... ஜிகு... காதல் ரசம் சொட்டச் சொட்ட கனிவுடன் தருகிறார். ஆஹா... ஓஹோ... பேஷ்! பேஷ்!
சென்னை, ஈரோடு அனுராதா

✉ தமிழ் மீது அபார பற்று உள்ளவராகத் தம்மைக் காண்பித்துக் கொள்ளும் ராமதாஸ், முதலில் தம் மகனை வேட்டி, சட்டையில் தோன்றச் சொல்லட்டும். ஏதோ லண்டன்வாசி போல் கோட், சூட்டில் அல்லவா எப்போதும் காணப்படுகிறார்.
சென்னை, பால.சூர்யா

✉ 'சுனாமி அரசியல்' செய்திப் பக்கத்தில் முதல் செய்தியில் 'ஜயேந்திரர் கொலையில் கைது செய்யப்பட்டுள்ள அப்புவும்..' என்றிருக்கின்றது. சங்கரராமன் தான் கொலை செய்யப்பட்டதாக விசாரணை நடைபெறுகிறது. ஜயேந்திரர் எப்போது கொலை செய்யப்பட்டார் என்பதைக் கூறுவீர்களா?
திருச்சி, பி.வி. குப்புஸ்வாமி

✉ 'சுனாமி அலை கார்ட்டூன்' மனதைத் தொட்டு தாக்கிய அதிர்ச்சிகரமான கார்ட்டூன்.
அயன்புரம், த.சத்தியநாராயணன்

✉ அரசு சாதனைகளை விளக்க செலவிடுவதைவிட, கற்க வேண்டிய கட்டாயப் பாடங்களை தெளிவாக 'கல்கி' மட்டுமே கூறியது வேதனையான சூழலிலும் ஒரு நிம்மதி.
மயிலாடுதுறை, எஸ்.டி. ராயன்

✉ சென்டிமெண்ட் செம்மல்களை தேடிப் பிடித்துப் போட்ட உம்மைச் செம்மையாகப் பாராட்டணும்.
சென்னை, வே. முருகேசன்



✉ வாரம் ஒரு வி.ஐ.பி. கல்கியை விமர்சனம் செய்வது எங்களுக்கும் பெருமையாக இருக்கிறது.
ஈரோடு, ரேவதிப்ரியன்

✉ செய்யாறு தி.நா.நாராயணன் எழுதிய 'சம்முவம்' சிறுகதை வெகு நெகிழ்ச்சி. அன்னையின் பாசத்தில் எனது நெஞ்சம் சுனாமி சூழலில் சிக்கிக் கொண்டது.
காமநாயக்கன்பாளையம், மா.மோகனராசன்

## காதல் ரசம் சொட்டச் சொட்ட...

✉ 'பட்டான போட்டி' முடிவுகளில் இத்தனை சுவாரஸ்யமான சம்பவங்களா...? படிக்கப் படிக்க ஆச்சரியப்பட்டுப் போனேன்.
கல்பூண்டி, வளர்மதி சீனிவாசன்





✉ பிள்ளையாரின் உருவம் சொல்லும் உயர் தத்துவத்தை அறிந்தேன்.
திருவாரூர், டி.முருகேசன்

✉ 'பழி'க்குப் பழி வாங்கும் பழக்கம் அச்ச உணர்வு கொண்ட மனி தனுக்குத்தானே தவிர பாம்புக்கு இடையாது என்பதை, பரிவாதினி சொன்ன விதம் சிறப்பு.
புனலூர், பி.எல்.பரமசிவம்

✉ சங்கரராமன் கொலை தொடர்பாக வெளியிடப்பட்டுள்ள கார்ட்டூனைப் பார்த்தால், அடுத்த இதழில் அப்படி ஒரு கொலையே நடக்கவில்லை என்றும், எல்லாமே போலீஸார் எழுதிய கதையென்றும் 'கல்கி' ஒரு நிலைப்பாட்டை எடுக்கும் என்று நம்பத் தோன்றுகிறது.
சென்னை, லோகநாதன்

✉ சீதா ரவியின் 'குயில்தோட்டம்' ஒரு மனைவி எப்படி தனது கணவனின் சுக துக்கங்களில் பங்கு கொண்டு, எவ்வாறு அவனது முன்னேற்றத்துக்குப் பாடு படுகிறாள் என்பதை நன்றாக சித்திரித்துக் காட்டியது. கோபுலுவின் வண்ணச் சேர்க்கை மேலும் மெருகூட்டியது.
சென்னை, ஜே.துரைராஜ்

✉ ஓர் இசைக் கலைஞனின் உள்ளத்தில் ஏற்படும் நியாயமான பயம், லட்சியம் முதலியவற்றை அழகாக இசைத்துவிட்டார் சீதா ரவி.
சென்னை, ஆர்.நாகராஜன்

✉ தலையங்கத்தில் நீங்கள் எச்சரித்தது போலவே கொள்ளையர்கள் கடலளவு அள்ளிக் கொண்டு போக ஆரம்பித்துவிட்டார்கள். தகுதியானவர்களுக்கு நிவாரண நிதி போய்ச் சேருகிறதா என்பது பில்லியன் டு இ பவர் ஆஃப் பில்லியன் டாலர் கேள்வி! பணம், தகுதியற்றவர்களுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டது என்பதை, டாஸ்மாக் மதுபானக் கடைகள் விற்பனை மும்மடங்கு ஆனதும் உறுதி செய்கிறது!
சென்னை, கே.ராஜகோபால்



# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# அட... இதென்ன

**நாம் ஆவலுடன் எதிர்பார்க்கும் சில சந்திப்புகள் எதிர்பாராத சமயங்களில் நிகழ்ந்து விடுவதுண்டு இதைப் போன்று...**



**தயாளு அம்மாள்** : (முகமலர்ச்சியுடன்) அடடே, வணக்கம். நல்லா இருக்கீங்களா?

**ஜெயலலிதா** : (யோசித்தபடி) பெட்டர். நீங்க எப்படி இருக்கீங்க? 'அவரு' எப்படி இருக்காரு?

**தயாளு அம்மாள்** : எல்லாரும் நல்லா இருக்கோம்.

**ஜெயலலிதா** : எனக்கொரு ஹெல்ப் செய்யுங்க. பேசாம உங்க கணவரை தொல்காப்பியப் பூங்கா, கண்மணிப் பூங்கா இந்த மாதிரி எதையாவது எழுதிக்கிட்டிருக்கச் சொல்லுங்க. அதை முடிச்சுட்டார்ன்னா நெஞ்சுக்கு நீதி இன்னொரு 32 பகுதி எழுதச் சொல்லுங்க. கழகக் கண்மணிகள் வாங்கிப் படிப்பாங்க. சும்மா சும்மா என்னைப் பத்தி ஏதாவது ஸ்டேட்மெண்ட் விடறதுக்கு, இதையாவது உருப்படியா செய்யலாம்.

எப்பவும் ஐயா முழங்கறாரே. வீட்டில நீங்க எப்படி இருக்கீங்க? ஒரே ரவுசா இருக்குமே?

**தயாளு அம்மாள்** : (தயங்கியபடி) அது வந்து...

**ஜெயலலிதா** : அட, சும்மா தயங்காம சொல்லுங்க. நாம தான் ஃப்ரெண்ட்ஸ் ஆயிட்டோமே.

**தயாளு அம்மாள்** : அதை ஏன் கேக்கறீங்க. கல்யாணமான புதுசில ஒரு முறை அப்படிதான் காபி வேணுமான்னு கேட்டேன். எழுந்து நின்னு ஒரு தரம் மூக்குக் கண்ணாடியை துடைச்சிட்டுப் போட்டார். அவ்வளவுதான். மனோகரா பட ஸ்க்ரிப்ட் மாதிரி, எதையோ ஒண்ணை அப்படியே முக்கால் மணி நேரம் ஒப்பிச்சுட்டாரு. காபி வேணும்னாரா இல்லை வேணாம்னாரான்னு தெரியலை. ஆனா அதுக்கப்புறம் காபி வேணுமான்னு கேக்கறதை விட்டுட்டேன்.

**ஜெயலலிதா** : வாட் எ பிட்டி! இப்பவும் அப்படித்தான் இருக்காரா?

**தயாளு அம்மாள்** : கட்டாயம் நான் அவர் கிட்ட சொல்றேங்க.

**ஜெயலலிதா** : (மனதிற்குள் - பார்த்தா ரொம்ப அப்பாவியா இருக்காங்க. இவங்ககிட்ட எதாவது மேட்டர் கிடைக்குதான்னு பார்ப்போம்.) (சிரித்தபடி) அது சரி, தமிழ் தமிழ்னு

**தயாளு அம்மாள்** : ஆமா. முந்தா நாள்கூட நான் இடியாப்பம் சாப்பிட்டுக்கிட்டிருந்தேன். அப்ப திடீர்னு "நீ? யார் கண்ணே என் முன் வந்தாய்?" அப்படின்னு இவர் குரல். சரி, நீர்மோர் தான் கேக்கறாருன்னு எடுத்துட்டுப் போய்ப் பார்த்தா, சிலப்பதிகாரம்

**-டமாஸ் சந்திப்பு!**

படிச்சிக்கிட்டிருக்கேன்னார். என்னத்தைச் சொல்ல?



# கலாட்டா?

**ஜெயலலிதா :** நீங்க அவரோட எப்படிப் பேசுவீங்க? தூய தமிழ்லயா?

**தயாளு அம்மாள் :** என்ன பேசறதா இருந்தாலும் "தேரா மன்னா செப்புவதுடையேன்" அப்படின்னு சொல்லிட்டுதான் பேசவே ஆரம்பிப்பேன். "தேரா மன்னா, நான் இன்னிக்கு கோயிலுக்கு போறேன். வர நேரம் ஆகும்" "தேரா மன்னா அடுத்த வாரம் வெளியே கூட்டிக்கிட்டுப் போறீங்களா?" "தேரா மன்னா, சப்பாத்தி ரெடியாயிடிச்சு..."

**ஜெயலலிதா :** ச்சோ ஸ்வீட். யூ ஆர் வெரி இன்னொஸன்ட். நீங்க என் பக்கம் இருந்திருக்கணும். உங்களை நான் கட்டாயம் அமைச்சராக ஆக்கியிருப்பேன். உங்களை மாதிரி அப்பிராணி ஆளுங்க தான் எனக்குத் தேவை. அது சரி நீங்களும் எழுத வேண்டியதுதானே?

**தயாளு அம்மாள் :** நான் என்னத்தை எழுத! அவர் தான் தினமும் வீட்டுப் பாடம் கொடுப்பாரு. எழுதுவேன். ஏதோ ஒரு வாடையைப் பத்தி சொல்வாரே... ஆங்... நெடுநல்வாடை. அதை தினமும் ஒரு பத்தி பார்க்காம எழுதிக் காட்டச் சொல்வார். அப்புறம் தான் மெட்டி ஒலி. ஆமா, நீங்க எப்படி, டி.வி.யெல்லாம் பார்ப்பீங்களா?

**ஜெயலலிதா :** நான் நேஷனல் ஜியாகிரபிக் மட்டும்தான் பார்ப்பேன்.

அதுல மட்டும் தான் எங்க கழகத்தைப் பத்தியும் ஆட்சியைப் பத்தியும் எதுவும் புளுகாம இருப்பாங்க.

**தயாளு அம்மாள்** : நீங்க இங்கிலீஷ் எல்லாம் படிக்கறீங்க. அன்னிக்குகூட உங்க பேட்டி ஒன்னு பிபிசில வந்துது. அவர் கிட்டப் போய் "தேரா மன்னா, அம்மையார் டீ.வி.யில வந்திருக்காங் கன்னு சொன்னேன்" விழுந்தடிச்சி ஓடி வந்து பார்த்தாரு. நீங்கன்னா அவருக்கு அவ்ளோ இஷ்டம்.

**ஜெயலலிதா** : (மனதிற்குள் - என்னை யாராவது திட்டினா அவ ருக்குக் கசக்குமா என்ன?) (புன்னகை செய்தபடி) பார்த்துட்டு என்ன சொன்னாரு?

**தயாளு அம்மாள்** : விழுந்து விழுந்து சிரிச்சிக்கிட்டேயிருந்தாரு. நடுநடுல விசில் அடிச்சாரு. எழுந்து நின்னு கை தட்டினாரு. உங்களையும் அந்த கரண் தாப்பரையும் அப்படியே ரிகார்ட் புடிச்சி வெச்சிட்டாரு. அடிக் கடி போட்டுப் போட்டுப் பார்ப்பாரு. சிரிப்பாரு. என்னையும் பார்க்கச் சொல்வாரு. ரொம்ப பிரமாதமா பேசினீங்க. எனக்கு தான் இங்கிலீஷ் புரியலை. ஏதாவது காமெடியா பேசினீங்களா என்ன?

**ஜெயலலிதா** : காமெடியா? (மன திற்குள் - கிண்டல் பண்றாரா இல்லை உண்மையாவே இன்னஸன்ட்டான்னு தெரியலையே?)

**தயாளு அம்மாள்** (உற்சாகத்துடன்) : இன்னொண்ணு தெரியுமா? உங் களோட பேசின அந்த கரண் தாப்பரை இவர் ஃபோன் பண்ணி பாராட்டி னாரு. சன் டி.வி.க்காக ஒரு 'டே அண்ட் நைட்' பேட்டி எடுக்க முடியு மான்னு கேட்டாரு. கேள்விகள்கூட இவரே எழுதித் தரேன்னு சொன்னாரு. நீங்க ஃப்ரீயா இருக்கும்போது கழகப் பணி ஆற்ற தாராளமா வரலாம்னு அவர் கிட்ட சொன்னாரு. என்ன சந் தோஷம் தானே? கூடிய சீக்கிரம் நீங்க சன் டீ.வி.யில வரப் போறீங்க.

**ஜெயலலிதா** : (கடுப்புடன்) சரி சரி... வீட்டுல என்னைத் தினமும் திட்டுவாறா?

**தயாளு அம்மாள்** : அவரு திட்ட றாரா பாராட்டறாரான்னு என்னால கண்டுபிடிக்க முடியாது. நற்றிணை, குறிஞ்சிப்பாட்டு மனப்பாடச் செய்யுள் மாதிரி ஏதோ சொல்லுவாரு. அடிக்கடி 'கிஞ்சித்தும்', 'சற்றொப்ப', 'இடி யாப்ப'ன்னு திட்டுவாரு. இதெல்லாம் தமிழா, இல்லை வேற மொழியான்னு தெரியாது.

**ஜெயலலிதா** : வெல், நான் கோட் டைக்குப் போகணும்.

**தயாளு அம்மாள்** : சரி, நீங்க கிளம் புங்க. நானும் கிளம்பறேன். இன்னிக்குப் பதிற்றுப்பத்தை பத்து தடவை எழு தச் சொல்லியிருக்காரு. உங்களோட பேசினதுல எனக்கு ரொம்ப சந்தோஷம்.

**ஜெயலலிதா** : (மனதிற்குள் - அய்யய்யோ.... கரண் தாப்பர் மாதிரியே பேசறாங்களே. ஒரு வேளை தேரா மன்னாவோட வேலையா இருக்குமோ?

**- மருதன்**



# Celebrate Your Meal!

with wide range of

# SAKTHI®

# PICKLES

Avakkai Mango,
Cut Mango,
Lime, Lime and Mango,
Tomato,
Garlic, Ginger
Mixed Vegetable,
Mango Thokku and many more!







SAKTHI MASALA (P) LTD., #6, Mamarathupalayam,





**மா**லா சொன்னது ஒரே ஒரு வார்த்தை. அதற்கு இத்தனை பெரிய தண்டனையா என்பது அவளது அம்மாவின் கேள்வி. ப்ளஸ் டூவில் ஆயிரத்து ஐம்பது மதிப்பெண்களை அள்ளிய மாலா, இப்போது முதலாண்டு பொறியியல் மாணவி. முதல் செமஸ்டரில் மொத்தமாகக் கோட்டை விட்டிருந்தாள். ஐந்து மாத காலமாக அவளது அப்பா அவளுடன் பேசாமல் இருப்பது, மனத்தளவில் அவளை முடக்கிவிட்டது.

நடந்தது இதுதான். அப்பாவுடன்



எப்போதேனும் மோட்டார் சைக்கிளில் சென்று வருவாள். அன்று கல்விக்கடனுக்கு விண்ணப்பித்துவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது, வழியில் டிராஃபிக் சிக்னலுக்காக வண்டியை நிறுத்தினார் அப்பா. எதிர்பாராமல் அருகே வந்த குமரகுரு, அவர்கள் அருகே பைக்கை நிறுத்திவிட்டுத் திரும்பியபோது, மாலா கண்களில் பட்டான். தனது வகுப்பு மாணவனைப் பார்த்த அந்தக் கணத்தில், அனிச்சையாய் அவனைப் பார்த்து 'ஹலோ' என்று சொல்லிவிட்டாள். பதிலுக்கு அவன் 'ஹலோ' சொல்வதற்குள் பச்சை சிக்னல் விழுந்து வண்டிகள் சீறிக் கிளம்பிவிட, வீடு வரும் வரை பொறுமையாக இருந்தார் அப்பா. உள்ளே நுழைந்ததும் "நடு ரோட்டுலே ஒரு ஆம்பளைப் பயலுக்கு ஹலோ சொல்றியா?" என்று ஆட்டம்பாமாக வெடிக்க, கொதித்துப் போனாள் மாலா.

"மறைவான இடத்துலே ஹலோ சொன்னா ஒத்துப்பீங்களா?" என்று பதிலுக்குத் துடுக்காகக் கேட்கப் போய், வாயடைத்துப் போன அப்பா அந்தக்கணம் முதல் மகளுடன் பேசுவதைத் தவிர்த்து விட்டார்.



அனுபமாவுக்கு வேறு மாதிரிப் பிரச்னை. அவளது பிறந்த நாளுக்கு 'With Love' என்று கையெ முத்திட்டு சக வகுப்புத் தோழன் வாழ்த்து அட்டை அனுப்ப, "நீ பல் இளிச்சிருப்பே, அதான் இப்படி அனுப்பியிருக்கான்" எனக் கடுமையாக விமர்சித்தார் அம்மா.

மோகனின் பெற்றோரைப் பாருங்கள். "என் பையன் நிறைய பொண்ணுங்களை அட்ராக்ட் பண்றான். அவன் ரூமில் எவ்ளோ கிப்ட்ஸ் குவிஞ்சுக் கிடக்கிறதைப் பாருங்க" என்று பெருமை பேசுகிறார்கள். ஆனால் மோகனின் தங்கை ப்ரீதாவுக்குப் போன்கால் எதுவும் வந்துவிட்டால் தொலைந்தது!

# அடக்கணுமா? அங்கீகரிக்கணுமா?

மகனை ரோமியோவாகக் கொண்டாடும் அதே பெற்றோர்கள் டென்ஷனில் காது வழியே புகை விடுகிறார்கள். இந்தியப் பெற்றோர்களில்

பெரும்பான்மையினர் மோகனது பெற்றோரைப் போன்ற மனப்பான்மை கொண்டவர்கள்தான். இதனாலேயே யுவதிகள் பலரும் ஆண்களுடனான நட்பை மறைத்துப் பாராட்ட வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள்.

"பஞ்சும் - நெருப்பும் அருகருகே இருந்தால் ஆபத்து!" என்ற ரீதியில், பொதுப் படையான பாலியல் ஈர்ப்பை, ஆண் - பெண் நட்பின் மீதும் வலுக்கட்டாயமாகத் திணிக்கிறார்கள். ஆண் ப்ளஸ் ஆண், பெண் ப்ளஸ் பெண் நட்பாயிருப்பது போல், ஆணும்- பெண்ணும் தூய்மையான நட்பைப் பாராட்ட இயலாதா?

மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பங்காக இருக்கும் இளைஞர்களின் வாழ்க்கையில், குறிப்பாக டீன்ஏஜ் பருவம் அதிக சிக்கல்கள் நிறைந்தது. உடலும், மனமும், உணர்வுகளும் பல்வேறு மாற்றங்களுக்கு உள்ளாகும் இந்தப் பருவத்தில் நண்பர்களைத் தேர்ந்தெடுக்கும்போது, நமது பிள்ளைகள் கவனமாய் இருப்பார்களா என்ற 'இந்தியக் கவலை' நியாயமானது. ஒவ்வொரு மனிதனையும் உயர்த்துவதும், வீழ்த்துவதும் இக்கால கட்டத்தின் நட்பும், உறவும்தான். உலகை அறிமுகப்படுத்திய பெற்றோரைவிட, அறிவை அறிமுகப்படுத்திய ஆசிரியரைவிட, 'நட்பே' பெரிதென்று நம்பும் இந்தப் பருவத்தில், ஆண்- பெண் நட்பை ஒடுக்குவதும், அடக்குவதும் விவேகமல்ல. மாறாக பெற்றோர், ஆசிரியர், உடன்பிறந்தோர், நண்பர்கள் என ஒவ்வொருவரும் தங்களது பங்கை எவ்வாறு செலுத்த வேண்டும் என்பதில்தான் ஆண்- பெண் நட்பின் வெற்றிச் சூட்சுமம் அடங்கியிருக்கிறது.

"ஒரு இளைஞனுக்கோ, யுவதிக்கோ பெற்றோர், உடன்பிறந்தோரின் அன்பு இயல்பாய், பூரணமாய்க் கிடைக்கும்போது, அனாவசியமான மனச்சிக்கல்களும், சிதைவுகளும் ஏற்படுவதில்லை. இந்த இரத்த உறவுகளைத் தவிர்த்து, வீட்டுக்கு வெளியே கிடைப்பதுதான் நட்பு. அதுவே நல்ல நட்பென்றால், அதன் மூலம் கிடைக்கிற அங்கீகரித்தலும், ஊக்குவித்தலும் இலட்சியங்களை வெல்ல பாதை போட்டுத் தருகிறது. இரு சுதந்திர மனதுடையவர்கள் இணைந்து, பரஸ்பரம் அன்பைப் பொழிந்து, ஒருவரை ஒருவர் தாங்கிக் கொள்ளும்போது, வாழ்க்கைப் பயணம், அது எவ்வளவு செங்குத்தாக இருந்தாலும் அது சுலபமாகிவிடுகிறது. இதில் ஆண் - பெண் நட்பை மட்டும் ஏன் விதிவிலக்காகப் பார்க்க வேண்டும்?" என்பது இளையோர் உளவியலில் தனி கவனம் செலுத்தி வரும் பேராசிரியர் மரிய சார்லஸின் கேள்வி.

"டீன்-ஏஜ் பருவம் படபடப்புக்கும் - பக்குவமின்மைக்கும் குறைவில்லாத பருவம்" என்று கூறுகிறார் ஐரோப்பிய உளவியலாளர் ஸ்டேன்லிஹால். நினைத்ததைச் சாதிக்க வேண்டும் என்ற இளமைத் துடிதுடிப்பு; உயர்வான இலட்சியங்களைப் பற்றிய கனவு; அங்கீகரிப்பு, பாராட்டு

"டீவி தொடர்ல வர்ற கதாநாயகி இறந்துட்டதுக்காக உங்க மாமியார் கறுப்புச் சேலை கட்டியிருக்கான்னு சொல்றது சரி. அதுக்காக ஒரு வாரமா அதே டிரஸ்ல இருக்குறது நல்லாயில்லே."

"என்ன செய்றது?... பாடியை இந்த வார எபிஸோடுலதானே அடக்கம் பண்ணறாங்க...!"

- எஸ்.ஓ. வீரன்

இரண்டுக்காகவும் ஏங்கும் உள்ளம்; சட்டென்று வரும் முன்கோபம். நண்பர்கள் தவறாகப் புரிந்து கொண்டால் தனிமையில் அழும் மனோபாவம். இப்படி டீன்-ஏஜ் பருவத்தினரின் நடவடிக்கைகளை அடுக்கிக் கொண்டே போகலாம். ஒரு இக்கட்டான சூழலில் தனித் தன்மையற்று மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் திணறும் இந்தப் பருவத்தில் ஏற்படும் மாற்றங்கள், தாக்கங்கள்தான் பிற்காலத்தில் அவர்களின் வாழ்க்கையை நிர்ணயிக்கின்றன.

பருவம் எய்தும் இக் கால கட்டத்தில் ஹார்மோன்கள் சுரக்க ஆரம்பிக்கின்றன. விளைவு! பாலியல் ரீதியான வளர்ச்சியும், உடற்கூறு வேறுபாடுகளும் தலை காட்டத் தொடங்குகின்றன. சிறுமிகள் பதினொரு, பன்னிரண்டு வயதிலும், சிறுவர்கள் பதிமூன்று வயதிலும் பருவக் கோட்டை எட்டுகிறார்கள். நியுமேன் & நியுமேன் கூறுவது போல "உடற் வளர்ச்சியுடன் கொஞ்சம் மன வளர்ச்சி, நண்பர்கள் கூட்டத்தில் சேருவது, முறையாக, நாகரிகமாக இருக்கத் தொடங்குதல் என்ற

சமூக உளவியல் அவர்களிடம் நிலை கொள்ளத் தொடங்குகிறது".

அதேநேரம் பதினைந்து முதல் இருபத்து நான்கு வயதுக்குட்பட்ட இளையோரில் தற்கொலை செய்து கொள்வோரின் எண்ணிக்கை 1960 முதல் 1986 வரை நூற்று அறுபத்து மூன்று சதவிகிதம் அதிகரித்துள்ளது என Statistical Abstract of the U.S. 1990 என்ற உலகம் தழுவிய ஆய்வு குறிப்பிடுகிறது.

"பதற்றமும் பக்குவமின்மையும்தான் இவர்களின் தற்கொலைக்கான காரணம்" என்று விவரிக்கும் ஆய்வறிஞர் எல். கோல்பர்க் "நல்ல பையன், நல்ல மாணவி



என்று பெயரெடுப்பதும், ஒழுங்கு விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டு வாழ்வதும் கூட இளையோரின் பண்பாடு" என்கிறார். பிறகு பெற்றோர்கள் ஏன் இவர்களைக் கட்டுப்பாடு இல்லாதவர்கள் என்ற கோணத்தில் பார்க்க வேண்டும்?

முதல் காரணம் பெற்றோர்களின் "என் பிள்ளை, என் மகள் என்ற பொஸசிவ்னெஸ்.. இளம் பருவ நட்பு என்பது சிறு பிள்ளைத்தனத்தையும், பெற்றோரைச் சார்ந்திருப்பதையும் விட்டு விடுவதற்குமான ஒரு முன்னோட்டம். எனவே இவர்களுக்குப் பெற்றோர் அளிக்கும் சுதந்திரம் தான் முதல் தேவை. எதற்குச் சுதந்திரம் என்றெல்லாம் அவர்களைக் கேள்வி கேட்பது, உங்கள் குழந்தைகளின் சிறகுகளை நீங்களே முறிப்பதற்குச் சமம். தன் வழி செல்வதற்கும், தன் நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும், தன் மனப் போக்கில் சிந்திப்பதற்கும் அவனுக்கு உரிமையும், சுதந்திரமும் வேண்டும். அவளுக்கு மனதுக்குள் ஆயிரம் இரகசியங்கள் உண்டு. ஆனால் அதை வெளியே சொல்ல மாட்டாள். அவனுக்கு சைக்கிள், பைக், கார் என வசதிக்கேற்ப வாகனம் அவசியம். அவளுக்கு உடைகள் தன் தனித்துவத்தைக் காட்டும் குறியீடு. பெரியவர்களின் நம்பிக்கையையும், மதிப்பீடுகளையும் இவர்கள் கேள்வி கேட்காமல், சரியான விடை கிடைக்காமல் ஏற்பதில்லை.

**பெற்**றோர்களோ, சுதந்திரத்தின் எல்லையை இவர்கள் மீறி விடுவார்கள் என்று பயப்படுகிறார்கள். இந்தப் பயம் ஓரளவு நியாயமானதும்கூட.

இந்திய சினிமா ஊடகம், நட்புக்கும், காதலுக்கும் பெரிய வேறுபாடு இல்லை என்றும் 'நட்பே காதல் என்ற தவறான கொச்சையான மதிப்பீட்டையும் உருவாக்கி வைத்திருப்பதன் பின்னணியில் வளரும் இந்திய இளைஞர்கள், யுவதிகளுக்கு, முறையான பாலியல் கல்வி இல்லாதது ஆண் - பெண் நட்புக்குப் பெரிய முட்டுக்கட்டையாக வந்து விழுகிறது. தேசிய உடல் நல வாழ்வு மற்றும் குடும்ப நலத்துறை நடத்திய ஆய்வு, இந்தியாவில் உள்ள இளம் பருவத்தினரில் (15-24) பதினேழு சதவிகித மாணவர்களும், முப்பத்து மூன்று சதவிகித இளம் தொழிலாளர்களும் திருமணத்துக்கு முன்பே உடல் உறவு வைத்துக் கொள்கிறார்கள் என்று தடாலடியாகச் சொல்கிறது. இந்த ஆய்வினை பொதுமக்கள் முன்பு வைத்திட மத்திய நலவாழ்வு அமைச்சகம் தயங்குகிறது. இதே தயக்கத்தை, பிள்ளைகளுக்குத் தரும் சுதந்திரத்தில் கண்மூடித்தனமாகப் பெற்றோர்களும் பின்பற்றுவதில்தான் பிரச்னையே!

பெற்றோர்கள் வேறு என்னதான் செய்வது...? பேராசிரியர் மரிய சார்லஸ் சொல்வதைக் கேளுங்கள்:

"உங்கள் பிள்ளைகளின் நட்பு, அவர்களின் உயர்ந்த லட்சியம், எதிர்காலம் பற்றிய கனவுகள் ஆகியவற்றுக்கு உரிய அங்கீகாரம் கொடுங்கள். உங்கள் குழந்தைகளை நண்பன் போல பாவித்துப் பேசும்போது தங்களுடைய ஆதங்கம், பிரச்னைகளை உங்களிடம் கொட்டித் தீர்ப்பார்கள். மொட்டு விரிவது போன்ற பகிர்தல் இது. அவர்கள் தலை சாய்த்துக் கொள்ள ஓர் அனுபவத் தோள் தேவை. அது நீங்கள் தான்"

**- ஆர்.சி. ஜெயந்தன்**

அட்டையில்: **ஐ.ஐ.டி நண்பர்கள்**

அட்டை, படங்கள்: **ஸ்ரீஹரி**

ஒரு மதுக்கடை.

அங்கே இரண்டு பேர் வந்தார்கள்.

அவர்கள் இரட்டைச் சகோதரர்கள்.



# மனதில் உறுதி வேண்டும்

ஒரே மாதிரி முகம்... ஒரே மாதிரி உருவ அமைப்பு.

அங்கே இருந்தவர்கள் எல்லோரும் அவர்களை ஆச்சரியமாகப் பார்த்தார்கள்.

இப்போது அந்த மதுக்கடையின் சொந்தக்காரர் மேடையில் ஏறினார்.

''என் அன்பான வாடிக்கையாளர்களே!

அந்தச் சகோதரர்கள் இருவரின் செயல்பாடுகளும் ஒரே மாதிரியாக இருப்பது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா?''

''ஆமாம்!'' என்றார்கள்.

''மேலோட்டமாகப் பார்க்கிறபோது நீங்கள் சொல்வது சரிதான்! ஆனாலும் அவர்கள் இருவருக்குள்ளேயும் ஒரே ஒரு வித்தியாசம் இருக்கிறது!''

''அப்படியா சொல்கிறீர்கள்?''

''ஆமாம்! அதற்காக இப்போது ஒரு போட்டியை அறிவிக்க வந்திருக்கிறேன்!''

''என்ன போட்டி அது... சொல்லுங்கள்.''

''அவர்களுக்கிடையே இருக்கிற அந்த ஒரு வித்தியாசம் என்ன? அதைக் கண்டுபிடித்துச் சொல்கிறவர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு!''

ஏற்கெனவே மது மயக்கத்தில் இருந்தவர்கள், ''இந்தப் போட்டி நமக்கில்லை'' என்று ஒதுங்கிக் கொண்டார்கள்.

மது அருந்தாமல் தெளிவோடு இருந்தவர்களும் யோசித்துப் பார்த்தார்கள்.

ஆளுக்கு ஒருவிதமாக பதில் சொல்லிப் பார்த்தார்கள். பலன் இல்லை!

இது மாதிரி சமயங்களில் மனம் தெளிவாக இருந்தால் மட்டும் போதாது... அது அறிவின் யோசனையைக் கேட்க வேண்டும். அப்போதுதான் சரியான விடை கிடைக்கும்.

அப்படிப்பட்டவர் ஒருவர் எழுந்தார்.

''எனக்குத் தெரியும் அது!'' என்று சொல்லிக் கொண்டே மேடைக்கு வந்தார்.

சொன்னார்: ''அந்த இரண்டு பேரில் ஒருவர் பாதி மயக்கத்தில் இருக்கிறார். இன்னொருவர் பாதித் தெளிவுடன் இருக்கிறார்!''

அவருக்கு ஆயிரம் ரூபாய் கிடைத்தது!



தென்கச்சி சுவாமிநாதன்

# அத்துமீறல் ராஜ்ஜியம்!

சங்கரராமன் கொலை வழக்கில் சட்டம் தன் கடமையை ஆற்று கிறது என்பது தமிழக முதல்வரின் வாதம். பிரதமரின் அறிவுரைக்கு அவர் அளித்த பதிலும் இதுவே. ஆனால் விஜயேந்திரர் கைதை தொலைக்காட்சியில் (அல்லது நேரில்) பார்த்த எவருமே, ஜெயலலிதா ஆட்சியில் சட்டம் தன் கடமையை ஆற்றியதாகக் கருத இடமில்லை. காவல்துறையின் அத்துமீறல் ராஜ்ஜியம் தமிழ்நாட்டில் தடபுடலாக நடைபெறுவதாகத்தான் முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது.

ஜெயலலிதாவைக் கைது செய்ய காவல்துறை போயஸ்தோட் டத்துக்குச் சென்றபோது, அவர் பூஜையில் இருந்தார். அதை முடிக் கும்வரை காத்திருந்தே காவல்துறை அவரைக் கைது செய்தது. ஆனால் சங்கர மடத்தில் பூஜை செய்து கொண்டிருந்த விஜயேந் திரரைக் கைது செய்ய, வாரண்ட்கூட இன்றி ஒரு பெரிய போலீஸ் படையே சென்றிருக்கிறது; பூஜை முடியும் முன்னரே அவரைக் கைதும் செய்திருக்கிறது.

விஜயேந்திரர் கைதினால் மடத்தில் பூஜைக்கு இடையூறு வராது என்று பிரதமருக்குப் பதில் சொன்னார் முதல்வர். ஆனால், பூஜையினிடையில்தான் அவர் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

இத்தனைக்கும், ஆரம்பம் முதலே இவ்வழக்கு விசாரணைக்கு முழு ஒத்துழைப்பு அளித்து வருகிறார் விஜயேந்திரர். ஒரு சில முறை விசாரணைக்குக் காவல் நிலையத்துக்கு அழைக்கப்பட்ட




**கல்கி**



2005 ஜனவரி 23
தாரண தை 10
மலர் : 63
இதழ் : 26


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




போது, உரிய நேரத்தில் தவறாமல் சென்றிருக்கிறார். ஒருமுறை விசாரணைக்கு அழைத்துவிட்டு அந்த அழைப்பை காவல்துறையே ரத்தும் செய்தது. இந்நிலையில் அவரைக் கைது செய்ய காவல் துறை மேற்கொண்ட முரட்டுத்தனமான அணுகுமுறை, பக்தர்களின் உணர்வைப் புண்படுத்துவதோடு, வழக்கின் பலவீனத்தையும் அடிக்கோடிட்டுக் காட்டுகிறது.

ஜயேந்திரரைக் கைது செய்து அறுபது நாட்கள் ஆன பிறகும் போலீஸால் அவர் மீது வழக்குப் பதிவு செய்ய முடியவில்லை. 'ஜயேந்திரர் மீது போலீஸாரால் சுமத்தப் பட்டுள்ள குற்றச்சாட்டுகளை நிரூபிக்க போதிய சாட்சியங்கள் இல்லை' என்று உச்சநீதி மன்றமும் தெளிவாக எடுத்துச் சொல்லி அவருக்கு ஜாமீன் வழங்கிவிட்டது. இவ்வாறிருக்க, விஜயேந்திரரை இப்போது அதே வழக்கில் கைது செய்திருப்பது தர்க்க ரீதியாக இடிக்கிறது. ஜயேந்திரர் ஜாமீன் பெற்றுவிட்டதைப் பொறாமல் எடுக்கப்பட்ட பழி வாங்கும் நடவடிக்கை என்பதாகவும் முடிவுக்கு வர இடங்கொடுத்துவிட்டது.

இன்னொன்றையும் பளிச்சென்று கூறியிருக்கிறது உச்சநீதிமன்றம்:

போதுமான சாட்சியங்கள் இல்லாமையால், ஜயேந்திரருக்கு இந்த வழக்கில் பெயில் தரப்பட்டிருக்கிறது. ஆனால் இதையே முடிவான தீர்ப்பாக யாரும் எடுத்துக் கொண்டு விடக் கூடாது. வழக்கு கீழ் கோர்ட்டில், அதன் போக்கில் நடந்து முடிய வேண்டும்.

உச்சநீதிமன்றத்தின் இந்த விளக்கமே, வழக்கு முடிகிற வரையில் ஜயேந்திரரை நிரபராதி என்று ஏற்க முடியாது என்பதையும் உணர்த்துகிறது.

குழப்பத்திலும் கலக்கத்திலும் இருக்கிற சங்கர மடத்தின் பக்தர்கள் உச்சநீதிமன்றத்தின் இந்த விளக்கத்தை கவனித்து மனத்தில் பதியவைத்துக் கொள்வது நலம். அவர் கைதானதால் கலங்கிவிடாமல், ஜாமீன் பெற்றதால் மகிழ்ச்சியில் துள்ளாமல், இறுதித் தீர்ப்புக்காகப் பொறுமையுடன் காத்திருக்க வேண்டும்.

ஜயேந்திரரைக் குற்றவாளி என்று நிரூபிக்க இன்னும் ஆதாரங்கள் திரட்டப்படாத




நிலையில், சங்கரராமன் கொலை வழக்கு இனி வருடக்கணக்கில் இழுத்தடிக்கும் என்று நாம் எதிர்பார்க்கலாம். இதனால் விளையக்கூடிய அரசியல் வியூகங்கள், தேர்தல் களேபரங்கள் என்று எதிர் வரும் காலத்தில் சுவாரஸ்யமான, சங்கடமான காட்சிகள் தமிழக அரசியலில் மட்டுமின்றி, தேசிய அரசியலிலும் காணக் கிடைக்கும்.

சங்கரராமன் கொலை வழக்கை தமிழக காவல்துறை சொதப்பியதால், அரசியலும் மதமும் முன்னெப்போதையும்விட பலமாகக் கைகோத்துக்கொண்டு இந்தியாவின் எதிர்காலத்தை அச்சுறுத்தும்.

முதல்வரும் காவல்துறையும் ஜயேந்திரரைக் கைது செய்வதற்கு முன்னால் இத்தகைய பின்விளைவுகளைக் குறித்து யோசித்ததாகத் தெரியவில்லை. சங்கரராமன் கொலை வழக்கை ஆராயும் சிறப்பு புலனாய்வுப் பிரிவுத் தலைவரும், ஆழ்ந்து சிந்தித்துச் செயல்படுவதாகத் தெரியவில்லை. ஜயேந்திரர் ஜாமீனில் வெளிவந்தவுடனே அவருக்கு அவசர அவசரமாக சம்மன் அனுப்பி, அதைவிட அவசரமாக அதனை வாபஸும் பெற்றிருக்கிறது காவல்துறை.

சங்கரமட பக்தர்கள் இயல்பிலேயே வன்முறைக்குத் துணியாதவர்கள் என்பதால் அமைதி காத்து வந்துள்ளனர். இந்த அமைதியையே தமிழக முதல்வர் தமது நடவடிக் கைகளுக்குக் கிடைத்த அங்கீகாரமாக நினைத்துக் கொள்வாரேயானால், அது மிகப் பெரிய தவறு. சமீபத்திய காவல்துறை அத்துமீறல்களால் மக்களின் மனம் ரணமாகிப் போயிருக்கிறது.

சங்கரராமன் கொலை படுபாதகமான செயல். அதைச் செய்தது யாராயினும், தூண்டியது யாராயினும் தண்டனைக்கு உரியவரே. ஆனால், புலனாய்வு, அறிவின் அடிப்படையில் நிகழாமல் உணர்வின் அடிப்படையில் தடாலடியாக நடைபெறுமானால், சட்டம் அதை ஏற்காது. அப்புறம் சட்டம் தன் கடமையை ஆற்றுகிறது என்று முதல்வர் சொல்வதே அர்த்தமற்றதாகிவிடும். ○

# டான்ஸர்





உண்மைக் கதைகளைப் படமாக்கி விட்டு, "இந்தக் கதையில் வரும் பாத்திரங்கள், சம்பவங்கள் யாவும் கற்பனையே" என்று பயந்து பல்டி அடிப்பதுதான் கோடம்பாக்கத்தின் வழக்கம். மாறாக குட்டி என்ற இளைஞனின் நிஜ வாழ்க்கையைத் தழுவி, அதில் ஜனரஞ்சக அம்சங்களைக் கலந்து, தன்னம்பிக்கை சினிமாவாகத் தந்திருக்கிறார் கேயார்.

ஒரு வெற்றிகர டான்ஸராக வர வேண்டும் என்ற குட்டியின் துடிப்பு. அவரது வலதுகால் துண்டான பிறகும் அடங்கி விடவில்லை. ஒற்றைக் காலையும், ஊனமாகாத உள்ளத்தையும் முதலீடாகக் கொண்டு முன்னேறிக் காட்டுகிறார். அவரது கனவுக்கு நட்பு கைகொடுக்கிறது.

இழந்த காலில் ஒரு செயற்கைக் காலைப் பொருத்திக் கொண்டால் ஜெயித்து விடலாம், நிறைய முன் உதாரணங்கள் உண்டு என நினைக்கிறவர்களுக்கு, குட்டி ஒரு விதி விலக்கு. அவரிடம் இருப்பது ஊன்றுகோல் மட்டும்தான். அதை லாகவமாகத் தூக்கி, மோட்டார் சைக்கிளின் கிக்கரை உதைத்து ஸ்டார்ட் செய்துவிட்டு, எல்லோரையும் போல் சவாரி செய்கிற திறனுக்கு தியேட்டர் அதிர கரகோஷம்.

மோட்டார் சைக்கிளை மட்டுமல்ல, மிதி வண்டி ஓட்டுகிறார், மாடிப்படி ஏறுகிறார், மாடியிலிருந்து குதிக்கிறார், குண்டர்களைப் பந்தாடுகிறார். ஒரு ஹீரோ என்னவெல்லாம் செய்வாரோ எல்லாம் செய்கிறார், காதலைத் தவிர. அவரது செயல்பாடுகளின் உச்சமாக நடனம். அவர் ஆடும் வேகம் ஒரு பம்பரத்தை நினைவுபடுத்துகிறது.

குட்டி எப்படிக் காலை இழந்தார் என்ற துயரமான ஃப்ளாஷ்பேக்கை படத்தின் தொடக்கத்திலேயே சொல்லிவிடாமல், ரகசியம் காத்து ரசிகர்களை இருக்கையிலேயே இருத்தி வைத்திருக்கும் இயக்குனர், திரைக்கதையில தேர்ந்த வித்தகர். ரசிகர்களின் வசவுகள் உறுதி என்ற நிலையிலும் எதிர்மறையான கேரக்டரில் நடிக்க ஒப்புக் கொண்டிருக்கும் ராபர்ட்டைப் பாராட்டியே தீர வேண்டும்.

தன்னம்பிக்கை தெறிக்கும் இசையைத் தந்தே தீர வேண்டிய கட்டாயம் ப்ரவீன் மணிக்கு. ஜமாய்த்திருக்கிறார். குட்டிக்கு நடன அசைவுகள் அமைத்திருக்கும் கலா, பிருந்தா, கல்யாண் ஆகியோரும் கவனத்தை ஈர்க்கிறார்கள். குடும்பத்தோடு ரசிக்க வேண்டியவன் மட்டுமல்ல, தன்னம்பிக்கையை ருசிக்கக் கற்றுத் தருபவன் இந்த டான்ஸர். **- விஷுவல்தாசன்**

- அபவ் ஆவரெஜ்






# நடக்குமென்பார்; நடக்கும்...

**மேஷம் :** பாராட்டப் பட வேண்டியதுங்க உண்மையான நட்பு. உங்க ராசிக்கிரகங்கள் நட்போட சீராட்ட வர்றதால, எடுத்த காரியமெல்லாம் வெற்றிதான். ஆரோக்கியமும், பயணங்கள்ல அனுகூலமும், தேவையான, அளவுக்குப் பண வசதியும் கிடைக்கும். ஆபீஸ் நண்பர்களும் ஆதரவு காட்டுவாங்க. அனுகூலமான திருப்பம் ஒண்ணும் காத்திருக்கு. தொழில், வியாபாரத்திலேயும் அபிவிருத்தி ஏற்படும். பழைய கடன் தொல்லை மறையும். குடும்பத்திலேயும் பிரச்னைகள், குழப்பங்கள் மறைஞ்சி ஒற்றுமையும், மகிழ்ச்சியும் உண்டாகும்.

**ரிஷபம் :** துணிவும் தன்னம்பிக்கையும் உங்களோட மூழ்காத ஃபிரண்ட்ஷிப் வெச்சிருக்கிறதால எதிர்ப்புகள் மறைஞ்சு, அனுகூலம் அதிகமாகும். புது அறிமுகங்கள் சிலதும், கொஞ்சம் செலவினமும் கூடும். ஆபீஸ்ல நயமாகவும் நட்பாவும் பேசிப் பழகறது பிரச்னைகளைக் குறைக்கும். புதிய முயற்சி வெற்றி தரும். தொழில், வியாபாரத்தில் கொடுக்கல் வாங்கல் கை கொடுக்கும். எதிர்பார்த்த உதவி கிட்டும். குடும்பத்திலயும் ஒற்றுமையும், பூர்வீக சொத்து சேர்க்கையும் ஏற்பட்டு குதூகலம் கிட்டும். திருமணமாகாதவங்களுக்கு தை பிறந்ததும் வழி பிறக்கும்.

**மிதுனம் :** பார்க்கும்போது சும்மா 'ஹலோ'ன்னு போறதில்லைங்க நட்பு. உங்க ராசியில சூரியனும் ராகுவும் உங்க கூடவே இருக்கிறாங்களே, அதுதாங்க நட்பு. அவங்க நட்பால எத்தனை

## அக்னிசர்மா பக்கம்

### ஜனவரி 19 முதல் 25 வரை



## பரிகாரம்

மருத்துவர் மருந்தை எழுதிக் கொடுத்தாலும், அதை கைப்பக்குவமாய், நோய்க்கேற்ற விதமாய் என்னென்ன தேவையென்பதை அறிந்து செய்து கொடுப்பவர்தானே முக்கியம்? 4448 நோய்களை குணமாக்கும் 'திருச்சாந்துருண்டை' என்ற மருந்து இங்கே கிடைக்கிறது. வைத்தீஸ்வரரும் தையல்நாயகியும்தான் சீஃப் டாக்டர்கள். ஆனால் மருந்தைத் தயாரித்துத் தரும் முத்துக்குமாரசுவாமிதான் முக்கியம். தை மாதத்தில் கிருத்திகையிலோ, சஷ்டியிலோ இங்கே வந்து மந்திர தீர்த்தங்களில் நீராடி முத்துக்குமரனை வழிபட்டு மருந்து சாப்பிட்டால், தீராத வியாதியும், வினையும் தீரும். அதுவரை சேராத அருளும் சேரும் - வைத்தீஸ்வரன் கோயிலுக்கு மாயவரம் சீர்காழி, சிதம்பரம் எங்கிருந்தும் எளிதாகச் செல்லலாம்.

- வி

கஷ்டமான வேலையையும் சுலபமா முடிப்பீங்க. தேவைக்கேற்ற பணவசதியும் கிடைக்கும். ஆபீஸ்லயும் பாராட்டும், பதவி உயர்வும் கிடைக்கும். தொழில், வியாபாரத்தில் நெருக்கடிகள் மறைஞ்சு நிம்மதி கிடைக்கும். கூட்டுத் தொழில் முன்னேறும். குடும்பத்தில் ஒற்றுமை கூடும்னாலும் எதிலேயும் நிதானத்தோட நடந்துக்கிறது, நல்லது. உடன் பிறந்தவங்க உதவுவாங்க.

**கடகம் :** ஊடலும் கூடலும் காதலுக்கு மட்டுமில்லிங்க, நட்புக்கும் உண்டு. உங்க ராசிக் கிரகங்கள் இப்போ சின்னச் சின்ன ஊடல்ல இருக்கிறதால, சிறு பிரச்னைகளும், சில தடங்கல்களும் உண்டாகும். கவலைப்படாதீங்க, வாரக் கடைசிக்குள்ள எல்லாம் சரியாயிடும். ஆபீஸ்ல அனுகூலமான திருப்பங்கள் சில உண்டாகும். புத்திசாலித்தனமா பயன்படுத்திக்கோங்க. தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு முன்னேற்றமான வாரம். குடும்பத்தில் எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து சேர்ந்து மகிழ்ச்சி உண்டாகும்.

**சிம்மம் :** உண்மையைச் சொல்றதானா, நாக்கில இருக்குதுங்க நட்பு. நாக்கில பதம் இருந்தா வாக்குல இதம் வரும். பேச்சுல இதமிருந்தா பிசாசுகூட நட்பாச்சேன்னு போயிடும். உங்க பேச்சால சகலரையும் வசப்படுத்துற நேரங்க இது. உங்க திறமையும் அறிவும் அதனால கூடி அனுகூலங்கள் ஏற்படும். ஆபீஸ்லயும் சுமுகமான சூழ்நிலையும், புது முயற்சிகள்ல வெற்றியும் ஏற்படும். தொழில், வியாபாரத்தில் உற்சாகம் கூடும். வரவேண்டிய பாக்கி எல்லாம் வந்து சேரும். குடும்பத்தில் இதுவரை இருந்த நெருக்கடி விலகி நிம்மதி கிடைக்கும்.

**கன்னி :** உங்க ராசியில 3வது வீட்டு செவ்வாய் உங்களுக்கு குளோஸப் நண்பராகிறதால, உங்க நம்பிக்கையும் துணிவும் கூடி திட்டமிட்டபடி காரியங்களை நிறைவேத்திடலாம். சில பிரச்னைகள் அப்பப்போ வந்து போகும். கவலைப்படாதீங்க. பயணங்கள்ல மட்டும் எச்சரிக்கையா இருங்க. ஆபீஸ்ல மந்தமான நிலை மாறி, உற்சாகச் சூழ்நிலை உருவாகும். புதிய முயற்சிகளை நிதானமாக ஆரம்பிக்கறது நல்லது. தொழில் வியாபாரத்தில் புதிய திருப்பம் ஏற்படும். கொடுக்கல் வாங்கல் லாபகரமா நடக்கும். ஏற்றுமதி - இறக்குமதி தொழில்ல அளவோட ஈடுபடறது நல்லது. குடும்பத்தில் அக்கறையும் நிதானமுமா செயல்படறது, பிரச்னைகளைத் தீர்க்கும்.

**துலாம் :** எப்பவும் புடிச்ச மாதிரியே இருக்கிறதில்லிங்க நட்பு. அப்பப்போ இடிச்சும் சொல்லணும், சமயத்தில் அடிச்சும் சொல்லணும். உங்க ராசியில சனி பகவானும் குரு பகவானும் கொஞ்சம் நட்போட இடிச்சுக்கிற நேரங்க இது. அதனால சில தடங்கல்கள், தாமதம்னு இருந்தாலும் எல்லாம் நிவர்த்தி ஆயிடும். தெய்வபலத்தை அபிவிருத்தி பண்ணிக்கறது நல்லது. பண வசதி தேவைக்கேற்ற படிதான் இருக்கும். ஆபீஸ்ல கொஞ்சம் அடக்கி வாசிங்க. நிர்வாகத் துறையில இருக்கிறவங்க முன்னேறுவாங்க. தொழில், வியாபாரத்தில் கொடுக்கல், வாங்கல் கை கொடுக்கும். குடும்பத்தில் சிறு பிரச்னைகள் வரலாம்.

**விருச்சிகம் :** சொல்லாம நல்லது பண்றதுதாங்க நல்ல நட்பு, உங்க ராசியில குரு பகவானைப் போல. அவர் நட்பால உங்க காரியங்கள் நிறைவேறும். பாராட்டும் பேரும் கிடைக்கும். தாராளமான பண

நடமாட்டம் ஏற்படும். ஆபீஸ்லயும் ஆதரவும், பதவி உயர்வும் கிடைக்கும். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்களுக்கு நெருக்கடி மறைஞ்சு முன்னேற்றம் கூடும். குடும்பத்தில் குதூகலம் நிறையும். கல்யாணம், பிள்ளைப் பேறுன்னு காத்திருக்கிறவங்களுக்கு, சுப வேளை கூடி வந்துரும். புது வீடு, வாகனம், சொத்துன்னு வரவுகள் ஏற்படும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.

**தனுசு :** அடிதடியா இருக்கும் சிலர், அடுத்த நிமிஷம் பார்த்தா இழைவாங்க. அப்படியும் சில நட்பிருக்கு, உங்க ராசியில இருக்கிற சனியும், கேதுவும் போல. குருபகவான் அப்பப்போ மிரட்டல் பார்வை பார்த்து அடக்கிடறதால, வந்த குழப்பம், பிரச்னைகள் எல்லாம் அடங்கி சரியாயிடும். தெய்வ பலத்தைக் கூட்டிக்கறது நல்லது. ஆபீஸ்ல எதுக்கும் வாயைத் திறக்காதீங்க. ஆமாம், இல்லைன்னு சொல்லிட்டு நகர்ந்துடுங்க. புது முயற்சி எதுவும் இப்ப வேண்டாம். தொழில், வியாபாரத்தில் கொஞ்சம் கவனமா இருங்க. எச்சரிக்கையா இருக்கிறது எதிலேயும் நல்லது. குடும்பத்திலயும், அனுசரிச்சுப் போறது நல்லது. ஆரோக்கியத்தில் கவனம் தேவை. பெண்களுக்கு அமைதியும் பொறுமையும் அவசியம்.

**மகரம் :** உரிமையோட கொடுக்கிற நட்புதான், உரிமையோட கேட்டு வாங்கும். உங்க ராசியில குருவும் புதனும் நடத்துற பரிவர்த்தனையில லாபம் உங்களுக்குத்தான். திட்டம் போட்ட காரியமெல்லாம் பட்டுப் பட்டுன்னு நிறைவேறிடும். வி.ஐ.பிக்கள் ஆதரவும் கூடும். ஆபீஸ்ல உற்சாகம் நிறையும். புதுசா ஆரம்பிக்கற எல்லாம் அனுகூலமா நடக்கும். தொழில், வியாபாரத்தில் கடன்கள் தீர்ந்து லாபம் கூடும். குடும்பத்தில் சுப காரியங்களாலயும், மக்களாலும் மகிழ்ச்சி கூடும். ஒற்றுமை, உற்சாகம் கூடி சுப காரியங்கள் ஈடேறும். பெண்களுக்கு ஆடை, ஆபரணச் சேர்க்கை, பண வசதின்னு மகிழ்ச்சியான வாரம்.

**கும்பம் :** எட்டாவது வீட்டில குரு புது நண்பர்களோட செட்டில் ஆக கொஞ்சம் தாமதமாறதால, சிறு பிரச்னைகள் அப்பப்போ ஏற்பட்டு மறையும். தெய்வ வழிபாடு உங்க பலத்தைக் கூட்டி எல்லாத்தையும் சமாளிக்கும். புது அறிமுகம், எதிர்பாராத சந்திப்பு சிலது காத்திருக்கு. ஆபீஸ்ல அப்படியுமில்லாம இப்படியுமில்லாம நிலைமை இருந்தாலும் சுமுகமான போக்கு உங்களுக்கு உதவும். தொழில், வியாபாரத்தில் சில நெருக்கடி வந்தாலும், உதவி உடனே கிடைக்கும். குடும்பத்தில் அமைதி நிலவினாலும் குழந்தைகள் நலன்ல கவனமா இருக்கறது நல்லது. பணச் சிக்கலைத் தவிர்க்க சிக்கனமா இருங்க. பெண்கள் எண்ணம் போல எல்லாம் நடக்கும்.

**மீனம் :** மனசு காட்டற மானிட்டர்ல காட்சிய மாத்தற மௌனஸுங்க நட்பு. உங்க ராசியில சூரியன் மௌஸ் போல சோர்வை மாற்றி, உற்சாகம் கூட்டறதால உங்க திறமை, அறிவு வெளிப்படும். உங்க மதிப்பும், அந்தஸ்தும் கூடிப் பெருமை சேரும். புது அறிமுகம், பண நடமாட்டம்னு சோர்வு பறந்து உற்சாகம் கூடிடும். தொழில், வியாபாரம் சகல விதத்திலேயும் முன்னேறும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும்னாலும், குழந்தைகள் நலனை கவனமா பாத்துக்கோங்க. பணக் கஷ்டம் தீர்ந்து நிம்மதி கிடைக்கும். திருமணம், குழந்தைப் பேறுன்னு சுப வேளைகள் கூடி வரும். பெண்களுக்கு உடன் பிறந்தவர்களால் நன்மை கிடைக்கும்.

## இது நல்ல வாரம்

| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
|---|---|---|---|---|
| புதன் | ஜன.19<br>தை.6 | பரணி | நவமி | பாதிரிப்புலியூர் பாடலீஸ்வரர் உற்சவம் |
| வியாழன் | ஜன.20<br>தை.7 | கார்த்திகை | தசமி | தை கிருத்திகை |
| வெள்ளி | ஜன.21<br>தை.8 | ரோகிணி | ஏகாதசி | பீஷ்ம ஏகாதசி |
| சனி | ஜன.22<br>தை.9 | மிருக சீரிஷம் | துவாதசி | - |
| ஞாயிறு | ஜன.23<br>தை.10 | திருவாதிரை | திரயோதசி | - |
| திங்கள் | ஜன.24<br>தை.11 | புனர் பூசம் | சதுர்த்தசி | - |
| செவ்வாய் | ஜன.25<br>தை.12 | பூசம் | பௌர்ணமி | தைப்பூசம் |

# உள்ளம் துறந்தவன்

சுஜாதா



**கோ**வை விமான நிலையத்துக்கு அருகே உள்ள புதிய காலனியின் பெயர் ராஜ் நகர். தனித்தனியே பெரிய பெரிய வீடுகள் ஒவ்வொன்றும் இரண்டு கிரவுண்டில் மாடியும் கீழுமாக, நவீன வசதிகளுடன் கட்டப்பட்ட வீடுகள். பணக்காரக் காலனி. அதில் ராகவேந்தரின் இரண்டாவது மாப்பிள்ளை நாகரத்தினம் வசதியாக வாழ்ந்தார்.

காரேஜில் இரண்டு கார். போர்ட்டிகோவில் ஒரு கார். இரண்டு டிரைவர்கள். பெண்கள் (அமிர்தா, ரோகிணி) பள்ளிக்குச் செல்ல ஒரு கார். மகன் சரவணனுக்கு ஒரு கார். அம்மாவுக்கு ஒன்று. நாகரத்தினத்துக்கு ஒன்று. வருஷா வருஷம் காரை மாற்றுவார். இத்தனைக்கும் நாகரத்தினத்துக்கு வேலை வெட்டி கிடையாது. எல்லாம் மாமனார் அனுப்பும் பணம்.

ராகவேந்தரின் மகள் கல்யாணி பேரில் வைசியா பேங்கில் ஒரு அக்கவுண்ட். அதில் அவ்வப்போது செக்கில் கையெழுத்து வாங்கிக்கொண்டு நாகரத்தினம் செலவழிப்பார். இதில் நாகரத்தினத்துக்கு மிகுந்த மனத்தாங்கல்.

''உங்கப்பன் பரதேசிங்களை நம்புனாலும் நம்புவான், மாப்பிளையை நம்ப மாட்டானே. எல்லாம் அந்த ஆடிட்டன் பரமேஸ்வரன் வேலை. இரு, எல்லாருக்கும் வெச்சிருக்கேன் ஆப்பு.''

''அப்படியெல்லாம் பேசாதீங்க, உங்களுக்குப் பணம்தானே வேணும்? அப்பாவைக் கேட்டா கொடுக்கறாரு''

''ஒரு கோடி வேணும். கொடுப்பானா உங்கப்பன்?''

''கேளுங்க, கொடுப்பாரு?''

"நீ கேளு."

"எனக்கு ஒரு கோடி வேணாமே"

"உனக்கு கடுகு சைசிலே ஒரு மூக்குத்தி, ஒரு பாலிஸ்டர் புடைவை, கம்பெனி காலண்டர் போதும்னு வச்சிருக்கார்."

"ஒரு கோடி எதுக்கு இப்ப?"

"ஒரு கிரைண்டர் பிசினஸ் துவங்கப் போறேன். பங்களா தேஷுக்கு எக்ஸ்போர்ட் ஆர்டர் கிடைக்குது. ஒரு வருஷத்தில் ரெண்டு கோடியாக்கிடுவேன்."

"அடுத்தமுறை பேசறப்ப, அப்பாவைக் கேக்கறேன்."

"எனக்குன்னு தனி சம்பாத்தியம், தனி மரியாதை வேணும், உங்க வீட்டில."





படம் : ஸ்ரீஹரி

"அப்படியெல்லாம் பிரிச்சுப் பேசாதீங்க."

"எனக்குத்தான் வேலை இல்லைன்னுட்டாரு.. சாமிநாதன் வத்தி வெச்சான்." சாமிநாதனுக்கு ஒரு கெட்ட வார்த்தை வர்ணனை தந்தார்.

"பிள்ளைங்க முன்னால அந்த வார்த்தையெல்லாம் பேசாதீங்க!"

"அதுங்களுக்குத் தமிழ்ல அர்த்தம் தெரியாது. சரவணனுக்கு ஒரு வேலை போட்டுக் கொடுக்கச் சொன்னனே, எதாவது செஞ்சாரா?"

"சரவணனை மஞ்சரிக்குக் கட்டிக் கொடுக்கறதா பேச்சு இருக்குங்க."

"யாரு சொன்னாங்க?"

# 3

"அம்மாதான்."

"உங்கம்மாவுக்கு வாய்சே கிடையாது, பூச்சி. அந்தப் பெண் நம்ம எல்லாரையும் தூக்கி எறிஞ்சு பேசுது."

"சேச்சே மஞ்சு, தங்கமான பொண்ணு. அக்கா அக்கான்னு என்ன அன்பா பேசும்..."

"உனக்கு உங்க வீட்டில அத்தனை பேரும் தங்கம். நாய்க்குட்டி, குப்பைத் தொட்டி கூட தங்கம்."

"நான் போன் பண்ணி அப்பாவைக் கேக்கறேன்" என்றாள்.

நாகரத்தினம் உடனே செல்போனில் நம்பர் எடுத்துக் கொடுத்தார்.

"மாளவிகா, நான் நாகரத்தினம் பேசறேன்."

"எந்த நாகரத்தினமா, கோயமுத்தூர் மாப்பிள்ளைம்மா. பெரியவர்கிட்ட பேசணும், கொடுக்கறியா? ஹூம்! விச் நாகரத்தினம்! எல்லாருக்கும் திமிரு."

"மாமா, நான் நாகரத்தினம் பேசறேன்" உடனே குழைவு.

"சொல்லுங்க மாப்பிள்ளை."

"சௌக்கியமா இருக்கீங்களா? மாத்திரையெல்லாம்..."

"போர்ட் மீட்டிங்ல இருக்கேன். ஒரு மணி கழிச்சு நானே கூப்பிடறேன்."

போனை வைத்த நாகரத்தினத்தின் முகம் சுருங்கியது.

"எப்ப நான் போட்டாலும் போர்டு மீட்டிங்கல இருப்பாரு உங்கப்பா."

"பதட்டப்படாதீங்க, ராத்திரி நிதானமா பேசலாம்."

நாகரத்தினம் இன்டர்நெட்டில் பங்குகளில் விளையாடுவார். சில நாள்களில் நாப்பதாயிரம் அம்பதாயிரம் இழப்பார். சில நாள் பத்தாயிரம் வந்தால் குதிப்பார். அவருக்கு சந்து வட்டிக்காரர்களிடம் ஐம்பது லட்சம் கடன் இருந்தது. அதை மனைவியிடமோ மாமனாரிடமோ சொல்லவில்லை. ஆனால் ராகவேந்தருக்கு அது தெரியும். மாமனார் பெயரைச் சொல்லி நிறைய கடன் வாங்கியிருக்கிறார். மாமனார் எப்படியும் கொடுத்து விடுவார் என்ற நம்பிக்கையில் கடன் கொடுத்திருக்கிறார்கள். காட்டனிலும், சிங்கிள் டிஜிட் லாட்டரியிலும் நிறைய விட்டிருக்கிறார். மனைவிக்குத் தெரியாமல் குடிப்பழக்கமும், ஜங்ஷன் அருகே பெண் சகவாசமும் உண்டு. வெளிப்படையாக மாமனாரிடம் பேசும்போது, மிகுந்த மரியாதையுடன்தான் பேசுவார். இன் சாஃபில் அவர் கையாடிய பணத்துக்கு ஜெயிலுக்குப் போயிருக்க வேண்டும். மன்னிக்கப்பட்டு, பெரிய மனுஷனாக உலவுகிறார்.

ராத்திரி தன் தாய் மரகதவல்லிக்குக் கல்யாணி போன் செய்தாள்.

"என்ன கல்யாணி?"

"ஒண்ணுமில்லைம்மா, மாப்பிள்



• அமைச்சர் பா.வளர்மதி

## நட்பு

சமீபத்துல சுமதின்னு ஒரு தோழியை கல்யாண வீட்டில சந்திச்சேன். எனக்கு அடையாளம் தெரியல. ஆனா அவ முகமலர்ச்சியோட வந்து பேசினா. ரொம்ப சந்தோஷமா இருந்தது. நான் அமைச்சரானதும் முகம் மறந்த தோழிகள் நிறையப் பேர் போன்ல வாழ்த்தினாங்க. என் அரசியல் வாழ்க்கையில நட்பு இப்படி அடிக்கடி கிராஸ் ஆகுமே தவிர தொடருவதில்லை.

ளைக்கு ஒரு கோடி ரூபா பணம் வேணு மாம். பிசினஸ் புதுசா துவங்கறாராம். நிறைய லாபம் வருமாம்."

"ஏன் பணம் பத்தலையா?"

"இல்லைம்மா, தனக்குன்னு ஒரு தொழில், ஒரு மரியாதை வேணும்ங்கறார். என்னைப் போட்டு புள்ளைப் பூச்சி மாதிரி பிடுங்கறார்."

"ஒரு கோடியா?"

"ஆமா."

"எங்கிட்ட அத்தனை பணம் இல்லையே. எல்லாம் உங்கப்பா ஷேரா கொடுத்தது."

"உங்கிட்ட கேக்கலைம்மா, அப்பா கிட்ட."

"இதோ பக்கத்திலேயே இருக்காரு, பேசு."

கல்யாணி இதை எதிர்பார்க்கவில்லை.

"என்ன கல்யாணி, மத்யானம் நாகு போன் பண்ணிருந்தார். நான் மீட்டிங்ல இருந்தேன். யுரோப் போறேன். அதில பிசியா இருந்துட்டேன். கூப்பிட முடியலை."

"அப்பா, இவருக்கு ஒரு பிசினஸ் ஆரம்பிக்க, ஒரு கோடி ரூபா வேணுமாம்."

"என்ன பிசினஸ்?"

"என்னவோ கிரைண்டர், பங்களா தேஷ்னு சொன்னார்."

"பங்களாதேஷ்ல கிரைண்டரா? அங்க எல்லாரும் மீன் சாப்பிடறவங்கம்மா" என்று பெரிசாகச் சிரித்தார்.

"அப்பா, கேக்கச் சொன்னார், கேட்டேம்பா."

"கோவிச்சுக்காதேம்மா, ஒரு கோடி குடுக்கறதைப் பத்தி இல்லை. நாகு பக்கத்தில் இருக்காரா?"

"இல்ல, வெளிய போயிருக்கார்"

"முதல்ல எட்டு மணிக்குள்ள கிளப்லருந்து வீட்டுக்கு வரச் சொல்லு. ரூபா தர்றேன்."

"வந்துட்டார்ப்பா, இந்தாங்க பேசுங்க."

நாகு இலேசான போதையில், மூச்சில் வோட்கா மணத்துடன் இருந்தாலும் மரியாதையுடன்தான் பேசினார்.

"மாமா?"

"என்ன நாகு? ஏதோ கிரைண்டர் பங்களாதேஷ்னு, கல்யாணி சொல்லிச்சு."

"ஒரு எக்ஸ்போர்ட் ஆர்டர் வந்திருக்கு மாமா, என் ப்ரெண்டுக்கு. அதுக்கு ஒரு கம்பெனி ஆரம்பிக்க, மூலதனம்



"தெருவில மயக்கம் போட்டு விழுந்தவர் முகத்திலே தண்ணி தெளிச்சு எழுப்பியது ஒரு டாக்டர்னு நினைக்கிறேன்."

"எப்படி?"

"தண்ணி தெளிச்சதுக்கு அம்பது ரூபா பீஸ் வாங்கிட்டார்!"

- பம்மல் நாகராஜன்

[redacted]

போட்டு..."

"ஒண்ணு செய்ங்க, மாப்ளை. ஒரு ப்ராஜெக்ட் ப்ரபோஸல் மாதிரி உடனே டாகுமெண்ட் தயார் பண்ணி எனக்கு ஃபேக்ஸ் அனுப்பிருங்க. நான் கிளியர் பண்ணிர்றேன்."

"சரி மாமா."

"தப்பா நினைச்சுக்காதீங்க. ஐம் ஆன் சரபின் டு மை போர்ட். பேத்திங்கள்ளாம் சௌக்கியமா? நல்லா படிக்கிறாங்களா? சரவணனை கூப்பிடுங்க."

"அவன் இன்னும் வரலை."

"இன்னுமா? கோயமுத்தூர்ல அஸ்த மிக்கலையா இன்னும்?"

"படிக்கப் போயிருக்கான், குருப் ஸ்டடி."

"படிச்சா சரி, பொண்ணுங்களாவது நல்லா படிக்குதா? அதுங்களும் ஊர் சுத்துதுங்களா?"

"நல்லா படிக்கிறாங்க மாமா."

போனை வைத்ததும் "உங்கப்பனுக்கு நம்ம எல்லாமே நக்கல்தான். ப்ராஜெக்ட் ப்ரபோஸலாம் - போர்டில சாங்ஷன் வாங்கணுமாம். கதை! இல்லைன்னு சொல்றதுக்கு இப்படி ஒரு தந்திரம். பிச்சைக்காக, எனக்குப் பணம் வேண்டாம்னு சொல்லிரு, என்ன."

"சரிங்க" என்றாள் கல்யாணி.

ராத்திரியே நாகரத்தினம் அந்த ப்ரபோஸலைத் தயார் பண்ணி மெயில் அனுப்பினார்.

(தொடரும்)

# பழைய தொடர்புகள்

எவ்வளவோ காலத்திற்கும்
தூரத்திற்கும்
அப்பால் இருந்து வருகிறாய்/
வருகிறீர்கள்

நமக்குள் தூர்ந்திருக்கின்றன
ஒருமை பன்மையின் கோடுகள்

முகத்தைக் கழுவிக் கொள்கிறீர்கள்
நான் பழைய வழக்கத்தில்
துடைத்துக் கொள்ள
எனது துண்டைக் கொடுக்கிறேன்
அதிலிருக்கும் வேறொரு உடல்
வாசனையில்
கூசிப் போகிறீர்கள்.

என் வீட்டை
எப்படி உபயோகிப்பதென
உங்களால் கற்றுக் கொள்ள
முடியவில்லை



எந்த இடத்தில் உட்காரப் போனாலும்
அங்கு வேறு யாரையோ உணர்கிறீர்கள்.

பேச்சை
முன்னெப்போதோ
விட்ட இடத்திலிருந்து
தொடர்கிறீர்கள்.
இடையே கடந்து கொண்டிருக்கிறது
ஒரு பெரிய நிசப்தம்.

இப்போதைய நமது
அவரவர் உலகங்களைப் பற்றி
சொல்கிறீர்கள்/கேட்கிறீர்கள்
அது நம்மை
இன்னும் பரிச்சயமற்றவர்களாக்குகிறது.

பழைய நாட்கள்
எவ்வளவு நல்லவை என்பதை
அடிக்கடி வலியுறுத்துகிறீர்கள்
அவற்றை மீண்டும் வாழ
வேண்டியதில்லை என்பதால்
எனக்கும் அவை நல்லவையே.

கல்லறையைத் தோண்டும்
நாய்களென
நாம் களைத்த வேளை
விடைபெற்றுக் கொள்கிறீர்கள்
பார்க்க வந்தவரைப் பார்க்காமலே.

எனது குழந்தைகளுக்கு
உங்களைப் பற்றி
நான் சொல்லியதேயில்லை
என்னும் உங்கள் வருத்தம்
நியாயமானதுதான்.

அதற்காக
தற்செயலாய் எதிரே வந்துவிட்ட
நீங்கள் அறியாத
எனது நண்பன் ஒருவனை
நீங்கள் அவ்வளவு வெறுத்திருக்க
வேண்டியதில்லை.

('நீராலானது')

மனுஷ்ய புத்திரன்

## மைக்ரோவேவ் மாமி

# இஞ்சி வடை

இந்த வாரம் 'நட்பு' ஸ்பெஷல்ங்கறதால நானும் தோஸ்து புலாவ், ஃபிரெண்ட்ஷிப் பக்கோடானு ஏடாகூடமா செய்யறதா இல்ல. அதுக்குப் பதிலா ஒரு சூப்பர் ஐட்டம் சொல்லித் தரப் போறேன். பேரு 'இஞ்சி டிக்கி' (தமிழ்ல இஞ்சி வடை) என்ன பேரே கிக்கா இருக்கோ!



- இஞ்சி - 300 கிராம்
- கடலை மாவு - 150 கிராம்
- பச்சை மிளகாய் - 5
- சர்க்கரை சேர்க்காத கோவா - 50 கிராம்
- எண்ணெய் - பொரிக்க.
- உப்பு - தேவைக்கு

முதல்ல இஞ்சியை நன்னா தோல் சீவிட்டு, துருவிக்கோங்க. அதுல கொஞ்சம் உப்பைச் சேர்த்து ஒரு முக்கால் மணி நேரம் தனியா எடுத்து வச்சிடுங்கோ. அப்புறமா அதுல கொஞ்சம் ஜலத்தை விட்டு நன்னா அலசிட்டு, ஜலத்தைக் கொட்டிடுங்கோ.

இப்போ அந்த இஞ்சியில கடலை மாவு, பச்சை மிளகாய், கோவா மூணையும் கலந்துடணும். இந்தக் கலவையை வடை மாதிரி தட்டி, பொன்னிறமா, கரகரப்பா, பொரிச்சு எடுத்தா... இஞ்சி வடை ரெடி. முக்கியமான விஷயம் அடுப்பு 'சிம்'லதான் எரியணும். சொல்லிட்டேன்.

இதை நேக்கு சொல்லித் தந்தது யார் தெரியுமா! டெல்லியில இருக்குற என்னோட ஓர்ப்படிதான். உ.பிலே இந்த டிஷ் ரொம்பப் பிரபலமாமே!

'இஞ்சிருங்கோ... இஞ்சிருங்கோ'னு ஜோதிகா மாதிரி பாடிக்கிட்டே சாப்பிடுங்க... நான் வரேன்...!







# புக்பேங்க்



**அனுமன் - வார்ப்பும் வனப்பும் - ஹரி கிருஷ்ணன்**

வெறும் கற்களால் கடலில் பாலம் கட்டும் காலமானாலும் சரி, கம்ப்யூட்டரில் இரகம் தேடும் காலமானாலும் சரி, மனித முன்னேற்றத்துக்குத் தேவை கூர்மையான அறிவு, தேர்ந்த நிர்வாகம், சாதுரியமான சொல், செயல் திறன், உடல்பலம், பலத்துக்கேற்ற அடக்கம், மாறாத பக்தி- எல்லாம்தான். இதிகாச காலம் தொட்டு இன்றுவரை அத்தனையும் சொல்லித் தர ஒரே ஒருவர்தான் உண்டு. வேறு யார்...?

ஆயிரம் குதிரைகள் பூட்டி, ஆயுத வரிசை ஏந்தி, அட்டகாசமாய் போர்க்களத்துக்கு வந்தது ராவணனின் தேர். அத்தனையும் இழந்து 'நடந்து போய் நகரம் புக்கான்' என்று அவனைத் திருப்பியனுப்பிய ராமனுக்கு, வாகனனாய் 'ஏறு நீ ஐய என்னுடைத்தோளின்மேல்' என்ற 'சிறிய திருவடி'யான அனுமன்தான். அந்த அனுமனின் இயல்புகளை அலசி, இன்றைய போராட்ட வாழ்வுக்கு அவன் மூலம் கிட்டும் மனத் தெளிவை ஆய்வு செய்து அளிக்கும் பெட்டகம்.

**கிழக்கு பதிப்பகம், 16, கற்பகாம்பாள் நகர், மயிலை, சென்னை - 4, விலை ரூ.175/-**

**பெண்களுக்கான பயனுள்ள பல்சுவைக் குறிப்புகள் - சுதா குருசாமி**

2½ லட்சம் சதுர கி.மீ கூடக் கிடையாது. ஆனால் உலகம் பூராவும் கொடி பறக்கவிட்ட பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் போல, வீட்டிலேயே சிறிய இடமாக இருந்தாலும் 'சக்தி' வாய்ந்த இடம் சமையற்கட்டுதான். ஆனால் தன் பலம் என்ன என்பதைப் புரிந்து கொள்ளாததுதான் அதன் பலவீனம். அந்தப் பலவீனம் நீங்கினால், சமையற்கட்டிலிருப்பதை வைத்தே அடுத்த தலைமுறையை மட்டுமல்ல, முந்தைய தலைமுறையையும் வசியப்படுத்த முடியும். அதற்கு அழகு, ஆரோக்கியம், சுவை, மருத்துவம், பிள்ளைப்பேறு என்று சகலவற்றுக்கும் உதவும் குறிப்புகள் தரும் அகராதி.

**ஸ்ரீசெண்பகா பதிப்பகம், 24, கிருஷ்ணா தெரு, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.30/-**

**சின்னஞ் சிறகுகள் - ஜீவி**

சிவப்புச் சாயம் தோய்த்து அரசியல் அவலம் கூறும் வல்லினம் இல்லை. வாட்டும் வறுமையில் நாட்டு மக்களின் சலிப்பைப் பேசும் இடையினமும் இல்லை. நிச்சயம் இவர் தனக்கும் புரியாமல், பிறர்க்கும் புரியாமல் எழுதும் நவீன இலக்கியத் தீவிரவாதி இல்லை.

மென்மையும் அழகும், வார்த்தைகளில் பதமும், சொல்வதில் இதமும் கொண்ட மெல்லினக் கவிதைகள். மூன்று வரிப் பூக்களில் தொடுத்த கதம்பம்.

**காலம் வெளியீடு, 25, மருது பாண்டியர் 4வது தெரு, கருமாரியம்மன் கோவில் எதிர்வீதி, மதுரை 625 002, விலை ரூ.20/-**

**- விஷ்வக்**

# ஏறுதே..! முன்னேறுதே..!



சென்ற வருஷம் மே மாதத்தின் மத்தியில் புதிய அரசு பதவி ஏற்றவுடன் சென்செக்ஸ் குறியீட்டு எண் பெரிய அளவில் குறைந்தது. எல்லோருக்கும் இது ஞாபகம் இருக்கும். ஆனால் அதற்குப் பிறகு புதிய அரசு குறைந்தபட்சத் திட்ட நோக்கை அறிவித்தவுடன், பங்கு மார்க்கெட் சுதாரித்துப் பங்குகளின் விலை ஏறத் தொடங்கியது. அப்படி முன்னேறிக் கொண்டிருந்த குறியீட்டு எண். 2005, ஜனவரி - 5ம் தேதி திடீரென்று சரியத் தொடங்கியது. என்ன காரணம்? பலர் பலவிதக் காரணங்களைச் சொன்ன போதிலும், அன்று வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள் லாப நோக்கில் பங்குகளை விற்க முயன்றது தான் முக்கியக் காரணம் என்று இப்போது தெரிகிறது!

பங்கு மார்க்கெட்டில் முக்கியமான சில கம்பெனிகளின் பங்குகள் ஒரு குறிப்பிட்ட அளவில்தான் வாங்கவோ, அல்லது விற்கவோ கிடைக்கின்றன. இதை Floating Stock என்று சொல்வார்கள். இந்த Floating Stock பங்குகளை வாங்குபவர்கள் அதிகமாகவும், விற்பவர்கள் குறைவாகவும் இருக்கும் போது, பங்குகளின் விலை ஏறுகிறது. இதுவே வாங்குபவர்கள் குறைவாகவும், விற்பவர்கள் அதிகமாகவும் .இருக்கும் போது விலை இறங்குகிறது. ஆனால் இந்த விலை ஏற்றமும் இறக்கமும் எல்லாக் கம்பெனிகளின் பங்குகளையும் பாதிப்பதில்லை. சில குறிப்பிட்ட கம்பெனிகளின் பங்குகள் (Heavy weighted Index shares) இந்த மாதிரி பாதிக்கப்படும்போது, பங்கு மார்க்கெட்டின் குறியீட்டு எண்ணும் பெருமளவில் பாதிக்கப்படுகிறது.

எனவே, பங்கு மார்க்கெட் குறியீட்டு எண்ணின் ஏற்றத்தாலோ அல்லது இறக்கத்தாலோ, நாம் அதிகம் உற்சாகமோ அல்லது கவலையோ படத் தேவையில்லை. நல்ல செயல்பாட்டுடன் விளங்கும் கம்பெனிகளின் பங்குகளை வாங்கி இருப்பவர்கள், அந்தப் பங்குகளைத் தொடர்ந்து வைத்துக் கொண்டிருக்கலாம்.

ஒரு சுவையான செய்தி:

பம்பாய் பங்கு மார்க்கெட்டின் Sensex என்ற குறியீட்டு எண் 1980ம் ஆண்டு பங்குகளின் மதிப்பு நூறு; இப்போது 6000க்கும் அதிகமாக இருக்கிறது. சென்ற இருபத்தைந்து ஆண்டுகளில் பங்குகளின் சராசரி விலை 60 மடங்கு உயர்ந்திருப்பது நல்ல முன்னேற்றம்தான்.

**பங்குச்சந்தை டிப்ஸ்:**

**தீனா வங்கி (10 ரூபாய் மதிப்புள்ள) புதிய பங்குகளை 27 ரூபாய்க்கு விற்க வருவதாகச் செய்தி வெளியாகியுள்ளது. தீனா வங்கியின் பங்குகளை தைரியமாக வாங்கலாம். விலை உயர நல்ல வாய்ப்புண்டு.**

**- வி. கோபாலன்**

(அடுத்த வாரம் பார்ப்போம்)

# காதல் செய்ய விரும்பு!

க.ஒப்பிலி அப்பன்

தண்டபாணிக்கு வயது இருபத்து ஐந்து. தனியார் நிறுவனத்தில் வேலை. வாட்ட சாட்டமாக இருப்பான். நல்ல சிவப்பு நிறம். கொஞ்ச நாட்களாக அவன் வழக்கமாக ஏறும் பஸ் ஸ்டாப்பில், மாலதி என்ற பெண், கவனிப்புக்கு உரியவளாக இருக்கிறாள். பஸ்ஸை மிஸ் பண்ணினாலும், இந்த 'மிஸ்ஸை' மிஸ் பண்ணாமலிருப்பதில் அதிக அக்கறை எடுத்துக் கொள்கிறான்...! மாலதியின் அந்த வட்ட முகம், துருதுரு கண்கள், கவீர் சிரிப்பு... தண்டபாணியைத் தடுமாற வைத்தன!

தண்டபாணி நிறையவே தமிழ் சினிமாக்களைப் பார்ப்பான். அவனுக்கு ஒரு விஷயம் நன்றாகவே தெரிந்தது. எந்தவொரு கதாநாயகிக்கும் விபத்தோ அல்லது வில்லனால் ஆபத்தோ ஏற்படும் சமயம், ஆபத்பாந்தவனாக அவளைக் காப்பாற்றும் கதாநாயகன் மீது காதல் ஏற்படும்! ஆனால் மாலதி, மலையைத் தாண்டவோ, ஆற்றைக் கடந்து அக்கரைக்குச் செல்லவோ, சவுக்குத் தோப்பில் தன்னந்தனியாக செல்லவோ சூழ்நிலை ஏதும் இல்லையே... முத்தையா முதலித் தெருவிலிருந்து இரண்டு தெருக்களைக் கடந்து, மெயின் ரோட்டை அடைந்து, கம்பெனிக்கு பஸ்ஸில் சென்று, நேரத்துடன் வீடு திரும்பும் அவளுக்கு என்ன விபத்து ஏற்பட்டு விடப் போகிறது... ஆனால் வில்லன் எப்பொழுது வேண்டுமானாலும், யார் உருவிலும் வரலாம்...! அந்த வில்லனிடமிருந்து மாலதியைக் காப்பாற்றி, அவள் மனத்தில் இடம் பிடிக்கும் தருணத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தான்...!

அன்று வழக்கமாக மாலதி ஏறும் பஸ்ஸில் அவனும் ஏறினான்... ஆனால் அந்த பஸ்ஸில், வில்லன், சாரி, வில்லன்கள் இரண்டு பேர் இருப்பது தண்டபாணிக்குத் தெரிந்திருக்க நியாயமில்லைதான்...! அவர்கள் இருவருமே பிக்பாக்கெட் ரவுடிகள்... தங்களது கை வரிசையைக் காட்ட சமயத்தை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந்தனர்... அன்று பஸ்ஸில் கூட்டமும் கொஞ்சம் அதிகம்தான்... நெரிசலைப் பயன்படுத்தி, ஒருவன் தன்னருகே உள்ள பேண்ட் ஆசாமியின் பர்ஸை எடுக்க முயன்று கொண்டிருந்தான்...! ஆனால் உஷார் பேர்வழியான அந்த நபர், திடீரென்று கூச்சலிட, அவனை பெண்கள் பக்கமாக ரவுடி தள்ளிவிட்டான்... கம்பியைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்த மாலதியின் மீது அந்த ஆசாமி வேகமாக சாய, பயத்தில் மாலதி அலற, அந்த ரவுடியின் முகத்தில் ஓங்கி அறைந்தான் தண்டபாணி. தன் நண்பனைத் தாக்கியதில் ஆத்திரமுற்ற மற்றொரு ரவுடி, கத்தியுடன் தண்டபாணி மீது பாய்ந்தான். அவனை இழுத்துப் போட்டு அறைந்து, ஒரு தள்ளு தள்ளினான்... அந்த ரவுடியும் இரண்டு பேர் மீது மோதியவாறே கீழே விழுந்தான்...!

கண் இமைக்கும் நேரத்தில் நடந்து விட்ட இந்தக் களேபரத்தில், பெண்கள் அலறிக் கூச்சலிட, குழந்தைகள் அழ, மற்றவர்கள் கத்த, ஒரே குழப்பம்! யார் யாரை, எதற்காக அடிக்கிறார்கள் என்று புரியாமல் அமளிதுமளி! பஸ்ஸும் நிறுத்தப்பட்டது. சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அந்த ரவுடிகள் இருவரும் பஸ்ஸிலிருந்து இறங்கி ஓடினர்... தண்டபாணியும் அவர்களை துரத்திப் பிடிக்க இறங்கி ஓடினான்.

மறுநாள் காலை... அதே பஸ் ஸ்டாப்... அன்று தண்டபாணி சற்று முன்னதாகவே வந்து நின்று கொண்டான்...! நேற்று அந்த ரவுடிகளைப் புரட்டி எடுத்ததை மாலதி பார்த்திருப்பாள்... நிச்சயம் அவளது கவனம் நம் மீது திரும்பும்... இன்று அவள் தன்னைப் பார்க்கும் பார்வையில், இதற்கு பதில் கிடைத்து விடும்...!

பதில் சொல்ல வேண்டிய மாலதியும் வந்தாள்... அவளுடன் அவளது தோழிகள் சிலர். சிறிது நேரத்தில் பஸ்ஸும் வந்தது. தண்டபாணி ஸ்டைலாக அதில் ஏறினான். ஆனால் மாலதி அந்த பஸ்ஸில் ஏறவில்லை. திகைத்துப் போன தண்டபாணி அவளைப் பார்க்க, மாலதியும் அவனைப் பார்த்தவாறே தன் தோழிகளிடம் சொன்னது அவனது காதில் நன்றாகவே விழுந்தது.

"இந்த பஸ் வேணாம்டீ... நேத்து நாலைஞ்சு ரவுடிகள் சண்டை போட்டாங்களே... இன்னிக்கு கூட அதுல ஒருத்தன் வரான்... நாம அடுத்த பஸ்ஸுல போலாம்!"



வில்லன்களை அடித்து வில்லங்கமாகிப் போன தனது நிலைமையை நினைத்து, தண்டபாணி தலையில் அடித்துக் கொள்வதற்கும், கண்டக்டர் விசில் அடிப்பதற்கும் சரியாக இருந்தது!




# எலக்ட்ரானிக் குப்பைகள்

அமெரிக்காவில் வசிக்கும் (நியூ யார்க்) மிஷெல் பாஸாஃப் கூப்ஃபர்மன்ஸ் (Michelle Passoff Kupfermunz) என்பவர் புது விதமான கன்ஸல்டன்ஸி சர்வீஸ் நடத்துகிறார். வீடு அல்லது அலுவலகம் முழுக்க சாமான்களைக் குப்பை போல் சேர்த்து வைத்துக் கொண்டு அவதிப்படும் நபர்களுக்கு, 'உடைமைகளைக் குறைத்துக் கொண்டு வாழ்க்கையை எளிமையாக்கிக் கொள்வது எப்படி?' என்று அறிவுரை அளித்து கட்டணம் வசூலிக்கிறார்! இவர் முக்கியமாக எடுத்துச் சொல்வது: 'உடைமைகளும் தேவைகளும் குறைவதால் ஆன்ம பலம் பெருகும்; அதனால் நம் செயல்கள் துல்லியமாகும்; பணிகளின் தரம் மேம்படும்' என்கிற அறிவுரையைத் தான்!

சமீபத்தில் இந்தியாவுக்கு வந்திருந்த கூப்ஃபர்மன்ஸ், கிராமத்து வீடுகளின் எளிமையைப் பார்த்து அசந்து போனார். "எளிமையாய் வாழ்வது எப்படி என்று பிறருக்கு வழிகாட்டி, அதன்மூலம் நான் பிழைப்பு நடத்துகிறேன் என்பதை இந்த கிராமத்துப் பெண்களிடம் எவ்வாறு விளக்குவதாம்?" என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போனார் கூப்ஃபர்மன்ஸ்.

இந்திய நகரவாசிகள், கிராமவாசிகளைப் போல் இல்லை என்று கண்டு இவர் எச்சரித்தும் இருக்கிறார். காலத்தோடு வரும் எச்சரிக்கை!

தேவைக்கு அதிகமாகப் பொருள்களை வாங்கி வைத்துக் கொள்கிறோம். குறிப்பாக, எலக்ட்ரானிக் சாதனங்களை உபயோகிக்க ஆரம்பித்த பிறகு, செல்ஃபோன், டீ.வி, கம்ப்யூட்டர்களின் அடுத்தடுத்த நவீன வடிவங்களை வாங்குவதில் நாம் காட்டும் ஆர்வம் அதிகரித்து வருகிறது.

அவசியமில்லாத வசதிகள் பொறுப்பற்ற கைகளுக்குக் கிட்டுகிறபோது, வக்கிரங்கள் விளைவது ஒரு பக்கம்;

இன்னொரு பக்கம், இத்தகைய எலக்ட்ரானிக் சாதனங்களைக் களைந்தெறிகிறபோது ஏற்படும் பயங்கர சுற்றுச்சூழல் மாசு!

செல்ஃபோன், கம்ப்யூட்டர், டீ.வி செட்கள் இன்னும் பல எலக்ட்ரானிக் சாதனங்களில் உள்ள சில பகுதிகளிலிருந்து கதிர்வீச்சு வெளிப்பட்டுக் கொண்டே இருக்கும். இவற்றை எந்தக் குப்பைமேட்டில் கொண்டு போய்க் களைந்தாலும், கதிர்வீச்சின் அபாயகரமான பாதிப்பு பூமியையும் சுற்றுச்சூழலையும் தாக்கும்.

இதை உணர்ந்துதான் மேலை நாடுகள் இத்தகைய எலக்ட்ரானிக் கழிவுகளை, 'செகன்ட் ஹான்ட் குட்ஸ்' என்ற போர்வையில் ஆசிய நாடுகளின் கள்ளச் சந்தைக்கு அனுப்பிவிடுகின்றன. ஆசியாவில் உள்ள சில பல நேர்மையற்ற எலக்ட்ரானிக் நிறுவனங்களும் இவற்றை வாங்கி, புதுப்பித்து அல்லது சில பகுதிகளைப் பிரித்தெடுத்து, புது உற்பத்தி செய்து விற்கின்றன! கழிவுகள் வெளியேற்றம் குறித்த கவலை இன்றி உற்பத்தி பெருகிக் கொண்டே இருக்கிறது.

டீ.வி, கம்ப்யூட்டர், செல்ஃபோன் இல்லாத வாழ்க்கையை இனி நம்மால் நினைத்துப் பார்க்க முடியாது என்பது உண்மைதான். ஆனால் கால் நூற்றாண்டு முன்பு வரையில், இவை எதுவுமேயின்றி ஒரு சராசரி நடுத்தரக் குடும்பம் மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்த முடிந்திருக்கிறது என்பதையாவது நாம் நினைவில் கொள்வதுதான் நியாயம்.

அடுத்த தலைமுறைக்கு நாம் விட்டுச் செல்லும் பூமியில், கதிர்களுக்குப் பதில் கதிர்வீச்சுதான் விளையும் எனில் நமக்கு மன்னிப்பு ஏது?

# வாசகர்கள் ஜமாய்க்கிறாங்க!

## காரல் மார்க்ஸைக் கை விடலாமா?

வேதாந்தத்துக்கும் நவீன விஞ்ஞானத்துக்கும் நெருங்கிய ஒற்றுமை இருப்பதாகவும், இந்தப் பிரபஞ்சத்தில் உள்ளது எல்லாம் பிரம்மமாகும் என்றும், ஆத்மாதான் பிரமம் என்றும் கேரளாவில் உள்ள கேசவன் நாயர் எழுதி உள்ள புத்தகம், பெரும் சர்ச்சையை கிளப்பி உள்ளது. இந்தப் புத்தகத்தை எழுதியவர் இடது கம்யூனிஸ்ட் கட்சியின் தொழிற்சங்கமான ஸி.ஐ.டி.யூவின் கொல்லம் ஜில்லா செயலாளர்.



காரல்மார்க்ஸ் தத்துவங்களுக்கு எதிரானதாகும் என கம்யூனிஸ்ட் கட்சியின் தீவிரவாதிகள் கடும் கண்டனம் தெரிவித்துள்ளார்கள்.

- திருவனந்தபுரம் எஸ். எஸ். மணி

## திருமணம் எதற்காக?

பிரிட்டிஷ் ஆசிரியையான மேரி கோரெல்லி திருமணமே செய்து கொள்ளவில்லை. ஒருமுறை அவளைச் சந்திக்க வந்த சிநேகிதி இது பற்றிக் கேட்டான்.

அதற்கு மேரி, ''திருமணமா! நான் ஏன் செய்து கொள்ள வேண்டும்? நான் செல்லமாக ஒரு நாயையும், ஒரு பூனையையும், ஒரு கிளியையும் வளர்க்கிறேன். ஒரு கணவன் என்ன காரியங்களைச் செய்வானோ அவற்றை இவை மூன்றும் செய்து விடுகின்றன. நாய் காலை எழுந்தது முதல் குரைக்கத் தொடங்கிவிடுகிறது. கிளி பகல் முழுவதும் திட்டிக் கொண்டே இருக்கிறது. பூனையோ இரவில் வீட்டில் தங்குவதில்லை'' என்றாள்.

ஆதாரம்: 'சிரிக்க சிந்திக்க, மேதைகளின் நகைச்சுவை' - மணிமேகலை பிரசுரம்

- செவல்குளம் ஆச்சா




## டாப்டென்!

நூலகம், கலை நிகழ்ச்சிகள் போன்றவற்றால் உலக நாடுகளுக்கு பிரிட்டனுடன் நல்லுறவு வளர்க்கும் நிறுவனம் பிரிட்டிஷ் கௌன்சில். இது ஆரம்பிக்கப்பட்டு எழுபது ஆண்டுகள் நிறைவானதையொட்டி கௌன்சில் ஒரு ஏற்பாடு செய்தது. ஆங்கிலம் பேசாத சுமார் நூறு நாடுகளில், நாற்பத்தைந்தாயிரம் பேரிடம் உங்களுக்குப் பிடித்தமான எழுபது ஆங்கில வார்த்தைகளைப் பட்டியல் இடுங்கள் எனக் கேட்டுக் கொண்டது.



எல்லாருக்கும் பிடித்த அழகான வார்த்தையாக motherதான் முதலிடம் பிடித்தது. அனைவருக்கும் பிடித்த முதல் பத்து வார்த்தைகள்: Mother, passion, smile, love, eternity, fantastic, destiny, freedom,liberty, tranquility.

ஒரு வேடிக்கை, 70 வார்த்தைகளில் father என்பது யாராலுமே தேர்ந்தெடுக்கப்படவில்லை!

- குவளை எழில்



# ஹரே காமெடி!

சன் டீவி. திங்கள் இரவு 8.30 என்றாலே ஊர், உலகம் சுற்றிக் காட்டும் விஜய சாரதி ஞாபகத்துக்கு வருவார். ஆனால் அவர் இனி அந்த நேரத்தில் 'ராம கிருஷ்ணா' காலனியைச் சுற்றி வரப் போகிறார். புதிய காமெடி சீரியலான 'ஹரே ராமா, ஹரே கிருஷ்ணா' மூலம்! மனைவிக்கு பயந்த கேரக்டரில் ப்பா... ப்பா... பாண்டு, தன்னைப் பெண் பார்க்க வருபவர்களுக்கு கோளாறை ஏற்படுத்தும் 'விசேஷ ஜாதகம்' கொண்ட பல்லவி மேனன், பல்லி மிட்டாய் முதல் பீரோ வரை பாரபட்சமின்றித் திருடும் உமா ரியாஸ்கான், ஜோசியர் வேஷத்தில் வரும் வில்லனாக அஜய்ரத்னம், இவர்களோடு ஸ்பெஷல் கேரக்டரில், தலை ஒட்டிப் பிறந்தவர்களாக வரும் பாலாஜி - தெனாலி, காலனிக்குள் நடக்கும் கூத்துக்களையும், ஒரு வாரப் பத்திரிகையால் இந்தக் காலனி சுற்றுலா செல்ல தேர்ந்தெடுக்கப்பட, அதன் பின் நிகழும் கும்மாளங்களையும், தொட்டுக்க கொஞ்சம் சஸ்பென்ஸோடு பரிமாறப் போகிறார்களாம்.

"எல்லாம் சரி... காமெடி சீரியலுக்கு 'ஹரே ராமா, ஹரே கிருஷ்ணா'ன்னு பக்தி கலந்த டைட்டில் ஏன்?", கேட்டோம் டைரக்டர் அருள்ராயிடம். "இப்ப நாட்டுல இருக்கிற பக்தியே காமெடியாத் தானே இருக்கு!" என்று கலகலக்கிறார்.

- ஷிவ்

# செல்ஃபோன் சிகிச்சை

மருத்துவத் துறையில், டெலிமெடிஸின், ஆன்-லைன் மெடிஸின் போன்ற நவீன சிகிச்சை முறைகள் நிறையவே உள்ள நிலையில், எஸ்.எம்.எஸ். மூலம் இலவசமாக ஆலோசனை தருகிறார் சென்னை, மேற்கு மாம்பலம், ஆதவ் பாலியல் கிளினிக் டாக்டர் காமராஜ்.

"நோயாளியை நேரில் பார்க்காமல், மருத்துவ ஆலோசனை தருவது சரியா? உங்கள் பல்வேறு பணிகளுக்கு இடையில் செல்ஃபோனில் வரும் அனைத்து எஸ்.எம்.எஸ்க்கும் பதில் சொல்லிக் கொண்டிருப்பது சாத்தியமா?'' போன்ற கேள்விகளுடன் அணுகினோம்.




"நோயாளியை நேரில் பார்க்காமல் சிகிச்சை தருவதுதான் தவறு. பொதுப்படையான சில ஆலோசனைகள் தரலாம்.

ஒருவர் 98412 66666 என்ற எங்கள் எண்ணுக்கு எஸ்.எம்.எஸ். அனுப்பியதுமே, நான் உடனுக்குடன் பதில் தருவதில்லை. என்னிடம் 'ஜி.டி. டயல்லர்' என்ற டாட் சர்ஃபர் கருவி உள்ளது. ரிலையன்ஸ் நிறுவனம் தயாரித்துள்ள இதன் விலை கிட்டத்தட்ட பதினைந்தாயிரம் ரூபாய். இதில் டேட்டா டிரான்ஸ்ஃபர் வசதி உள்ளது. தினமும் எனது பணிகள் எல்லாம் முடிந்த ஓய்வு நேரத்தில், இந்தக் கருவியில் பதிவாகியுள்ள கேள்விகளை, திரையில் பார்த்து தகுந்த பதில்களைத் தருவேன். பெரும்பாலும் பயனுள்ள விசாரிப்புகளாகவே இருக்கும்.

உதாரணத்துக்கு, "எங்களுக்குப் புதிதாக திருமணம் ஆகியுள்ளது. இப்போதைக்குக் குழந்தை வேண்டாம் என நினைக்கிறோம். கருத்தரிக்காமல் இருக்க பாதுகாப்பான முறை என்ன?" என்று கேட்பார்கள். இதற்கு ஆலோசனை தந்துவிடுவோம். ஆனால் சிலர் வயது, விவரம் எதுவும் தெரிவிக்காமல், சிகிச்சையே கோருவார்கள். 'தகுந்த மருத்துவரை நாடுங்கள்' என்று பதில் தருவதுடன் நிறுத்திக் கொள்வோம். சில சமயம், யாராவது விஷமிகள் போலியான பெயர்களில் விதண்டாவாதமாகக் கேட்பார்கள். அவற்றைப் புறக்கணித்துவிடுவோம். சுமார் அறுபது வார்த்தைகள் வரை கொண்ட பதில்களைத் தர முடியும் என்பதால், பாலியல் பிரச்னை மற்றும் குழந்தையின்மை சம்பந்தப்பட்ட நியாயமான சந்தேகங்களுக்கு, விரிவான பதில்களைத் தர முடியும். இந்த எஸ்.எம்.எஸ். தொழில் நுட்பத்தால் உலகத்தின் எந்த மூலையிலிருந்தும், நோயாளிகள் உடனடியாக, ஆலோசனை பெற முடிகிறது.' என்கிறார் டாக்டர் காமராஜர்.

- சரண்

நன்றாகக் குத்தும் அடியும் பட்ட வந்தியத்தேவன், தரையில் உட்கார்ந்தபடி இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். உடம்பில் அடிபட்ட வலியெல்லாம் மறந்து விடும்படியான அதிசயக் கடலில் அவன் மூழ்கியிருந்தான்.

"ஆகா! இவர்தானா இளவரசர் அருள்மொழிவர்மர்! இவர் கையிலே தான் எவ்வளவு வலிவு! என்ன விரைவு! குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும் என்பார்களே! குத்துப்பட்டால் இவர் கையினால் அல்லவா குத்துப்பட வேண்டும். இவரிடம் அர்ச்சுனனுடைய அழகும் கம்பீரமும் இருக்கின்றன! பீமசேனனுடைய தேக பலம் இருக்கிறது! நாடு நகரமெல்லாம் இவரைப் போற்றிப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லைதானே!" என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

# மோதிரக்கை நண்பர்

அருள்மொழித் தேவர் வந்தியத்தேவனை நோக்கிச் சமீபத்தில் வந்தார். 'மீண்டும் அவருடைய கை முஷ்டியின் பலத்தைச் சோதிக்க வருகிறாரோ' என்று வந்தியத்தேவன் ஒருகணம் திடுக்கிட்டுப் போனான்.

ஆனால் அவருடைய புன்னகை ததும்பிய மலர்ந்த முகத்தைப் பார்த்து அந்தச் சந்தேகத்தை மாற்றிக் கொண்டான்.

"அன்பரே! வருக! வருக! அழகிய இலங்கைத் தீவுக்கு வருக! சோழ நாட்டு வீராதி வீரர்களுடனே சேர்வதற்கு இத்தனை தூரம் கடல் கடந்து வந்தீர் அல்லவா? அப்படி வந்த உமக்கு நான் அளித்த வீர வரவேற்பு திருப்தி அளித்திருக்கிறதா? அல்லது அது போதாது, இன்னும் சிறிது படாடோபமான வரவேற்பு அளிக்க வேண்டும் என்று கருதுகிறீரா?" என்று இளவரசர் கூறிப் புன்னகை பூத்தார்.

வந்தியத்தேவன் குதித்து எழுந்து வணக்கத்துடன் நின்று, "இளவரசே! தங்கள் தமக்கையார் அளித்த ஓலை தங்களிடம் சேர்ந்துவிட்டது; என் கடமையும் தீர்ந்துவிட்டது. இனி இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. தங்களுக்கு விருப்பமானால் இன்னும் சிறிது நேரம் நாம் யுத்த காண்டம் படித்துப் பார்க்கலாம்!" என்றான்.

'ஆகா! உமக்கு என்ன சொல்வதற்கு? உம் உயிரைப் பற்றி இனி உமக்குக் கவலையில்லை, அந்தக் கவலை இனி என்னுடையது. இல்லாவிடில் நாளைக்கு இளையபிராட்டிக்கு என்ன மறுமொழி சொல்வேன்? நண்பரே, இப்போது நான் படித்த ஓலை என் தமக்கையாரின் திருக்கரத்தினாலேயே எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அவர் உம்மிடம் அதை நேரில் கொடுத்தாரா?" என்று கேட்டார்.

"ஆம், இளவரசே! இளைய பிராட்டியின் திருக்கரங்களிலிருந்து நேரில் இந்த



## அமரர் கல்கி

ஓலையைப் பெறும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பின்னர் எங்கும் நிற்காமல் இரவு பகல் பிரயாணம் செய்துவந்தேன்'' என்றான்.

''அது நன்றாய்த் தெரிகிறது. இல்லாவிடில் இவ்வளவு விரைவில் இங்கு வந்திருக்க முடியுமா? இப்படிப்பட்ட அரிய உதவி செய்தவருக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!'' என்று சொல்லிவிட்டு, இளவரசர் வந்தியத்தேவனை மார்புற அணைத்துக்கொண்டார். அப்போது வந்தியத்தேவன் சொர்க்கலோகத்தில் தான் இருப்பதாகவே எண்ணினான். அவன் உடம்பிலிருந்து வலியெல்லாம் மாயமாய் மறைந்துவிட்டது.

- 'பொன்னியின் செல்வனி'லிருந்து
வானதி பதிப்பகம்

# மகுட வைரம்

விஷ்வக்ஸேனன்

## 26. தாமதமேன் ஸ்வாமி..

கண்ணிமைக்கும் நேரத்தில் வெளிப்பட்டு ராஜாதித்தரை நோக்கி நீண்டு ஆடாமல் அசையாமல் உறுதியாக நிலைத்து நின்ற அந்தப் பெரும் வாளுடன், அந்த வாளை விட அதிகமாக, இரு உக்ரோதயங்களைப் போல் பளபளத்த விழிகளுடன் கால்களை உறுதியாகப் பதித்து, தாக்குதலுக்குத் தயாராக நின்ற பராந்தகனைக் கண்ட முகுந்தன் மனத்தில் சட்டென்று திகில் பரவியது. பல்லவர் உப தலைவருக்கு ஏதும் நேர்ந்துவிடப் போகிறதேயென்று பதறியவன், "பராந்தகரே" என்று குரல் கொடுத்தான்.

முகுந்தனின் நிலைக்கு நேர்மாறாக இருந்தது ராஜாதித்தரின் நிலை. இருந்த இடத்தைவிட்டு அசையவோ, தமது வாளை தற்காப்புக்காக எடுக்கவோ கூட அவர் முயலவில்லை. எதிரில் வாளை நீட்டியபடி நின்ற பராந்தகனை சலனமற்ற விழிகளால் நோக்கியவர் முகத்தில், முறுவல் ஒன்று படர்ந்தது. சற்று நேரத்தில் அது விரிந்து சிறு நகைப்பாகவும் ஒலித்தது.

"ஏன் நகைக்கிறீர்?" பராந்தகனின் கேள்வி வெகு உக்கிரமாக ஒலித்தது.

"நன்று பராந்தகா, நன்று. இந்த வாள் பதிலளிக்கப் போவது எனக்கல்ல, உனக்கு. அந்த வாளை நன்றாகப் பார். உன் இல்லத்தில்தானே அது பல்லாண்டுகளாக இருந்தது? அதில் பொறிக்கப்பட்டிருப்பது பல்லவரின் பழைமையான ரிஷப இலச்சினை. ஒரு சோழநாட்டு விவசாயியின் இல்லத்தில் பல்லவ வம்சத்து அரச முத்திரை பொறிக்கப்பட்ட வாள், ஆண்டாண்டுக் காலமாக ஏன் பாதுகாத்து வைக்கப்பட வேண்டும்? உன் தந்தை என்ன விளக்கம் அளித்திருக்கிறார் இதைப் பற்றி?" - திடமாக ஒலித்தது ராஜாதித்தரின் கேள்வி.

பராந்தகன் சற்றுத் திகைத்தான்.

ராஜாதித்தர் தொடர்ந்தார். "இது சாதாரண வாளல்ல பராந்தகா, சாளுக்கிய மாமன்னன் புலிகேசியை அழித்து, அவன் தலைநகர் வாதாபியை எரித்த வாள். கங்க, மாளவ மன்னர்களை மண்டியிட வைத்த வாள்; மானவன்மனுக்குத் துணையாகச் சென்று ஈழத்தில் வெற்றிக் கொடி பறக்க விட்ட வாள். மாமல்லர் நரசிம்மவர்மரின் உடைவாள்... உன் பாட்டனாரின் அன்னை இந்த வாளுக்கு மாலையிட்டு அவரை மணந்து கொண்டார்."

தான் கூறியவை பராந்தகன் சித்தத்தில் உறைய சற்று அவகாசமளித்த ராஜாதித்தர் தொடர்ந்தார், "பல்லவ நந்திவர்மனுக்கு நீ மகன் முறை மட்டுமல்ல, ராஷ்டிரகூடர் கிளை வம்சத்தில் வந்த அவன் மகன் நந்திவர்மனைவிட பல்லவ அரியணைக்கு அதிக உரிமையுடையவன். உன்னிடம் அரியணையை ஒப்படைத்துவிட்டு ஆலயப் பணிகளில் ஈடுபடச் சித்தமாக இருக்கிறான் நந்திவர்மன். உன் தந்தை கருணாகரனும்கூட இளமையில் சோழர் படை உபதலைவனாக செங்கட் சோழ மன்னரிடம் சேவை செய்தவன்தான். உன்னை ஈன்ற தாய் மறைந்த பின்பே போர்த் தொழிலை வெறுத்து, அமைதியான வாழ்வுக்குத் திரும்பினான். நந்திவர்மன் உன் தந்தையின் வம்சத்தைக் குறித்து விசாரிக்க முயன்றபோதும், எந்தச் செய்தியும் எட்டாமல் தடுத்துவிட்டான். மீண்டும் உன்னைப் பற்றி விஷ்ணுசித்தர் மூலமாகத்தான் அறிந்தோம்."

பராந்தகன் அடித்து வைத்த சிலையாக நின்றான்.

"நந்திவர்மனைவிட பல்லவ அரியணைக்கு அதிக உரிமையுள்ள உன்னை அமர்த்தினால் தமிழ் மக்களும், மன்னர்களும் ஏற்றுக் கொள்ளுவார்கள். மக்களுக்கும் அமைதியான வாழ்வு கிட்டும். உன் பதில் என்னவென்பதைக் கேட்டு வரவே என்னை அனுப்பினான் நந்திவர்மன்."

பராந்தகன் சற்று நேரம் மௌனமாக நின்றான். அடுத்து ஒலித்த அவன் குரல் தெளிவாகவும், திடமகவும் ஒலித்தது. "ராஜாதித்தரே, என்னைப் பற்றிய உண்மைகளை உணர்த்தியதற்கு நன்றி. என்னையும் என் சகோதரியையும், எங்கள் தாயுமின்றி வளர்த்து ஆளாக்க தந்தை என்ன பாடுபட்டார் என்பதை நான் அறிவேன். கல்வி புகட்டப் பொருளின்றி, ஒருவேளை உணவுமின்றி நாங்கள் வாடியபோது, எந்த உறவுகளும் வந்து உதவவில்லை. என் தந்தை வெறுத்த உறவுகள் எனக்கும் தேவையில்லை. இந்த உறவினால் கிட்டுவது அரியணையானாலும், அதுவும் எனக்குத் தேவையில்லை. என் முன்னோர் சோழ நாட்டுக்காக வாளேந்தியதாகச் சொன்னீர்கள். சோழ நாட்டை விடுத்து நான் மட்டும் வந்து விடுவேனென்று எப்படி எதிர்பார்க்கிறார் பல்லவ மன்னர்? வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் என் வாழ்வு சோழ மண்ணில்தான் அமையும். எனவே நீங்கள் இப்படியே திரும்பலாம்."

ராஜாதித்தரின் முகம் களையிழந்து கிடந்தது. தம்மிடமிருந்த ஓலைக் குழலை நீட்டியவர், "பராந்தகா, உன் விருப்பப்படியே செய். இந்த ஓலையைப் பாண்டிய மன்னரிடம் அளித்துவிடு. இதை ஏற்பதும், மறுப்பதும் அவர் விருப்பம். நான் வருகிறேன்" என்றவர் திரும்பி மண்டபத்தின் படிகளில் இறங்கி, பின்புறத்து மரக்கூட்டங்களை நோக்கி தளர்ந்த நடையுடன் சென்றார்.

முகுந்தன் திக் பிரமை - பிடித்து நின்றிருந்தான். உறவினரது அழைப்பையும், அரியணையையும், அரச போகத்தையும் கூட ஒருவன் இப்படி வெறுத்து ஒதுக்க இயலக்கூடும் என்பதை நேரிடையாகக் கண்டவனது முகத்தில் பிரமிப்பும், திகைப்பும் வழிந்தன.

"பராந்தகரே, அரச போகத்தையும், அதை அளிக்கக்கூடிய உறவுகளையும் புறக்கணிக்கும் மனிதரை இப்போதுதான் காண்கிறேன்" என்றான் முகுந்தன்.

"முகுந்தா, இந்த திடீர் உறவுகள் என்றுமே அபாயமானவை.



அவை தரும் சுகங்கள் அதைவிட அபாய மானவை. ராஷ்டிர கூடரை விரட்டிய பின்னர் மகாராணியாலும், மகன் நந்தி வர்மனாலும் ஏற்படக்கூடிய சிக்கல் களைத் தவிர்க்கவே, அரியணையை எனக் களிப்பதாகக் கூறுகிறார் பல்லவ மன் னர். அரச போகமும், அரியணைப் போட்டிகளும், அமைதியற்ற வாழ்வைத் தான் தரும். வயலிலும் சேற்றிலும் உழைத்து வாழும் எளிய வாழ்க்கை தரும் நிம்மதியை, எந்த அரியணையும் தர இயலாது."

"உண்மைதான் பராந்தகரே, முக்காலும் உண்மை" முகுந்தனின் குரலில் பூரணமாக ஏற்றுக் கொண்டானென்பது தொனித்தது. இருவரும் திரும்பி அழகரை வணங்கி விட்டு, வைகைக் கரையை நோக்கி நடந்தனர்.

சற்றுக் கழித்து முகுந்தன் கேட்டான். "பராந்தகரே, பல்லவ மன்னரின் நோக்கம் ராஷ்டிரகூடரை விரட்டுவது. நமக்கும் குறிக்கோள் அதுதான். அவர் கூறியனுப் பிய திட்டத்தை, அது தமிழகத்துக்கு நன்மை பயப்பதாயிருந்தால் ஏற்பது தவறல்லவே?"

"அப்படியென்ன திட்டம் முகுந்தா?"

"நான் இத்தனை தினங்களாக எங் கிருந்தேனென்று நினைக்கிறீர்கள்?"

"எங்கிருந்தாய்?"

"ராஷ்டிரகூடத்தில்."

"என்ன?"- பராந்தகனின் முகத்தில் வியப்பு தெரிந்தது.

"ஆம். பராந்தகரே, மகாராஜா கோவிந் தரின் ஆட்சி அங்கு மிகக் கொடுமை யான முறையில் நடக்கிறது. சுங்க மன்னனும் மாளவத்து வத்ஸராஜனும், கோவிந்தரை மதுவிலும் மங்கையரிலும் மூழ்கவிட்டு, தாங்கள் ஆட்சி செய்கிறார்கள். மக்களுக்கு ஒரே ஆதரவு மகாராஜாவின் ஒன்று விட்ட சகோதரர் துருவன்தான். இரு முறை புரட்சி செய்த மக்கள் கொடூரமாக அடக் கப்பட்டார்கள். மக்கள் துருவனை அரி யணையில் அமர்த்துவதே தீர்வு என்று நம்புகிறார்கள். துருவன் பல்லவ மன்னரி டம் உதவி நாடி வரவிருக்கிறார். இதைப் பயன்படுத்தி பல்லவ மன்னர் காஞ்சி மண்டலத்திலிருந்தும், தமிழகத்திலிருந்தும் ராஷ்டிரகூடரை விரட்ட எண்ணுகிறார்."

பராந்தகனின் சித்தம் அதிதுரிதமாக ஓடத்துவங்கியது. அவன் விழிகள் வைகை யின் பிரவாகத்தை வெறித்தன. தன் மகன் அரியணையில் அமர்வதை விட, தமிழ் மக்களின் அமைதியை விரும்பும் பல்லவ நந்திவர்மனின் கம்பீர முகம் அவன் கண் முன் எழுந்து நின்றது. "உனக்கும் எனக் கும் குறிக்கோள் ஒன்று தான் பராந்தகா, புரியவில்லையா உனக்கு?" என்றது. துணி வுடன் நிறைவேற்ற வேண்டிய திட்ட மொன்றும் அவன் சித்தத்தில் உருவெடுத் தது. அதை நிறைவேற்ற பல்லவ மன்ன னைச் சந்திக்க வேண்டியது அவசிய மென்பதும் புரிந்தது அவனுக்கு.

ஆனால் காஞ்சியில் பராந்தகனது பதிலையும், அடுத்து அவன் செய்யக் கூடி யதையும் முன்னதாகவே கணித்து விட்ட நந்திவர்மன், வெகு நிதானமாக, திடமாக தனது திட்டத்தை நிறைவேற்றத் தொடங்கி யிருந்தான். காஞ்சி அரண்மனை மட்டு மின்றி ராஷ்டிரகூடமும், பாண்டிய நாடும் கூட அவன் நாடகத் துக்கு அரங்கங்களாகிக் கொண்டிருந்தன.

**எ**ந்தக் காலத் திலும் தர்மத்துக்கும் அதர்மத்துக்குமான போராட்டங்கள் தொடர்ந்து கொண்டு தானி ருக்கின்றன. சில சமயங்களில் மனிதருக்கு மனிதர் மாறும் நியாயங்களுக்

* கோபிகா

நட்பு

**எ**ன்னோட தங்கை க்ளினிதான் என்னோட பெஸ்ட் ஃப்ரெண்டு. ஸ்கூல்ல படிக்கிறா! இரண்டு பேரும் ஒரே மாதிரி டிரஸ் பண்ணிக்க அம்மா விடமாட்டாங்க! கண்ணுபடுமாம் இதுதான் எங்களுடைய ஃப்ரெண்ட்ஷிப் சென்டிமெண்ட்!

கும், தர்மத்துக்கும் கூட போராட்டங்கள் நடக்கின்றன. தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் நடக்கும் போராட்டங்கள் காவியங்களாகி விடுகின்றன. தர்மத்துக்கும் நியாயங்களுக்கும் நடக்கும் போராட்டங்கள், வெறும் கதைகளாகி விடுகின்றன.

மகாராணி ரேவாதேவியைப் பொறுத்தவரை, தன் மகன் நந்திவர்மன் அரியணையில் அமரும்போது, அவனை எதிர்க்கக்கூடிய பலம் வாய்ந்த மன்னர் எவரும் தமிழகத்தில் இருக்கக் கூடாது என்று எண்ணுவது நியாயம்தானென்று எண்ணினாள். அதற்காகவே எந்த உபாயத்தையும் தந்திரத்தையும் கையாண்டதையும், அந்தப் பணியில் ராஜமாதுலரும், ராகுலனும் உயிரை இழந்ததும்கூட நியாயமென்றே எண்ணினாள்.

ஆனால் எந்த ஆதாரம், எந்த அடிப்படையான பலம் தனக்குப் பெரும் உதவியாக இருக்குமென்று நம்பினாளோ, அந்த மகாராஜா கோவிந்தரின் நிலையே ராஷ்டிரகூடத்தில் ஆட்டம் கண்டு கொண்டிருப்பதையும், அதற்குக் காரணம் தன்னுடைய ஒன்றுவிட்ட சகோதரன் துருவனே என்பதையும் அறிந்தபின்பு, அவள் சித்தம் அமைதியின்றித் தவிக்கத் தொடங்கியது. துருவன் பல்லவ மன்னரிடம் உதவி கோரி வரவிருப்பதை அறிந்தபின்பு, ராகுலனும், ராஜமாதுலரும் இல்லாத குறை பெரிதாகவே தெரிந்தது மகாராணிக்கு.

தமிழகத்து மன்னர்களைப் போலவே பல்லவ நந்திவர்மனும் 'மக்களுக்காகத்தான் மன்னன்' என்ற கொள்கையில் திடமான நம்பிக்கை வைத்திருப்பதையும், துருவனும் அதே குருட்டுக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவன் என்பதையும் உணர்ந்திருந்தவள், அடுத்து என்ன செய்வதென்ற சிந்தனையில் மூழ்கிக் கிடந்தாள்.

நீண்ட சிந்தனைக்குப் பின் துருவனைத் தடுக்க முயல்வது என்றும், மீறினால், காஞ்சியிலேயே அவனைச் சிறை செய்து, மகாராஜா கோவிந்தருக்குத் தெரிவிப்பது என்றும் தீர்மானித்தாள்.

வந்தனா பிரபுனு ஒரு கொங்கிணி தோழி இருக்காங்க. என்னோட ரசிகையா அறிமுகமாகி, சிநேகிதி ஆனவங்க. இரண்டு பேரும் ஸ்ரீசத்யசாயிபாபா பக்தைகள்... நான் ஏதாவது பேசணும்னு நினைச்சுக்கிட்டேயிருப்பேன். உடனே அவங்கிட்டேயிருந்து அதே விஷயமா ஃபோன் வரும். அப்படியொரு ஆத்மார்த்தமான நட்பு!

**நட்பு**



• அனுராதா கிருஷ்ணமூர்த்தி

இரண்டாவது தினம் காலையில் காஞ்சிக்கோட்டையின் வடக்கு வாயில் முரசுகள் ஒரே சீராக ஒலித்து, அரச குடும்பத்து விருந்தினர் வருகையை அறிவித்தன. அந்த ஒலி மகாராணி ரேவாதேவியின் இதயத் துடிப்பை உயர்த்தி, சித்தத்தில் கலக்கத்தை ஏற்படுத்தின.

அந்த முரசுகளின் ஒலி மகாராணியின் செவிகளில் மட்டும் விழவில்லை. வைகுந்தன் ஆலயத்தில் சிற்ப, சித்திரப் பணிகளைக் கவனித்தபடி நின்றிருந்த நந்திவர்மனின் செவிகளிலும் விழுந்தது. அவன் முகத்தில் ஒரு சந்துஷ்டியும் முறுவலும் மலர்ந்தன.

அவனது பெருவிழிகள் உயர்ந்து முகுந்த விமானத்தை நோக்கின. "வைகுந்தா, உன் திருவுள்ளம் இரங்க இத்தனை தாமதமா? என்னைப் பல நாட்கள் காத்திருக்க வைத்து விட்டாய் நீ" என்று வைகுந்தனையே இலேசாகக் கடிந்து கொள்ளவும் செய்தான் நந்திவர்மன்.

விழிகளைக் கீழே தாழ்த்தியவன், சற்றுத் தள்ளி நின்ற பல்லவ உபதலைவனை அழைத்து மளமளவென உத்தரவுகள் பிறப்பித்துவிட்டு, வாயிலை நோக்கி நடந்து, தனது புரவியிலேறி அரண்மனையை நோக்கி விரைந்தான்.

நந்திவர்மன் அரண்மனையை அடையவும், அழகிய ரதம் ஒன்று வீரர்கள் சூழ வாயிலில் வந்து நிற்கவும் சரியாக இருந்தது.

(தொடரும்)



''எனக்கு பாய் ஃப்ரெண்ட்ஸெல்லாம் யாரும் கிடையாது. ஆனா நான் சொல்லப் போற வி.ஐ.பிகளெல்லாம் என் ஃப்ரெண்ட்ஷிப்புக்காக அப்ளிகேஷன் போடலாம். ஓகேவா?'' என்று கண் சிமிட்டியபடி தமது விருப்பப் பட்டியலை வாசித்தார் 'மிஸ் சவுத் இண்டியா' பட்டம் தட்டிய ஸ்ராவ்யா. (வர்ணனைக்கு பார்க்க படம்!)

**ஏ.ஆர். ரஹ்மான்:**

இன்றைக்கு இருக்கிற யூத்தோட நாடியைச் சரியா பிடிச்சுப் பார்க்க யாருக்குமே தெரியலை. எங்க அலைவரிசையோடு ஒத்துப் போறவர் ரஹ்மான்தான். திறமையிருக்குமிடம் எளிமையும் இருக்கும் என்பதற்கு, நம்ம ஃப்ரெண்ட்தான் சரியான உதாரணம். என் செல்போன் ரிங்டோன்ல என்ன பாட்டு தெரியுமா? சர்க்கரை இனிக்கிற சர்க்கரை!

# அழகுக்கு அவர்... வீரத்துக்கு இவர்...

**ஷாருக்கான்:**

இந்தியப் பெண்கள் கிட்ட சர்வே எடுத்தா, அதுல நம்ம ஷாருக் படுத்துக்கிட்டே ஜெயிப்பாருங்க. இவர் நடிச்ச 'கஹோ நா ப்யார் ஹை' எத்தனை தடவை பார்த்தேன்னு எனக்கே தெரியாது. இந்த ச்சோ ஸ்வீட் மட்டும் என் ப்ரெண்டாயிட்டா, அவ்வளவுதான், என் ஃப்ரெண்ட்ஸெல்லாம் செம கடுப்பாயிடுவாங்க. ஹா...ஹா...ஹா!

**சில்வர் ஸ்டாலன்:**

தேவி தியேட்டர்ல 'க்ளிஃப் ஹேங்கர்' பிச்சிகிட்டு ஓடினப்போ தான் எனக்கு இவர் மேல க்ரேஸ் உருவாச்சு. இவரோட புஜபலம் பார்த்துதான், நம்ம ஊர் கைஸுக்கு எல்லாம் 'பாடி பில்டிங்குன்னா என்னன்னு' தெரிய ஆரம்பிச்சது.

சரி, என் இங்கிலீஷ் ஃப்ரெண்டுக்கு நான் அழகியானது தெரிஞ்சுருக்குமா?

**சச்சின் டெண்டுல்கர்:**

எனக்குப் பிடிக்காத கிரிக்கெட்டை நான்



• தோள் அழகன்



• வாட் எ சிக்ஸர்!



• பொறுமை காரு...

நினைச்சாலும் சிலிர்க்கும். டீன்ஏஜ் வயதுக்கான அத்தனை ஆசைகளையும் உதறி, 'கிரிக்கெட்டே தன் உயிர் மூச்சு'னு வாழ்ற என் ப்ரெண்ட்தாங்க எனக்கு, உங்களுக்கு எல்லோருக்கும் அழகான ரோல் மாடல்.

**சந்திரபாபு நாயுடு:**

**நா**ன் தமிழ்நாட்டுல பிறந்தாலும், இந்த அம்மணிகாரு ஆந்திராகாருங்க. நான் எப்போவெல்லாம் ஹைதராபாத் போறேனோ, அப்பல்லாம் ரோட்ல வழுக்கி விழுந்திருக்கேன். பின்னே குழந்தை கன்னம் மாதிரி ரோடுகளெல்லாம் வழுவழுன்னு இருந்தா என்ன பண்றதாம்? நாயுடுகாரு இன்னைக்கு அமைதியா இருந்தாலும் என் பெஸ்ட் ப்ரெண்ட் அல்லவா? பொறுமை காத்து மீண்டும் பூமி ஆள்வார் பாருங்க.

**- சநகன்**

படம்: **ஸ்ரீஹரி**

- சர்க்கரை!





- ஓகேவா?

பார்த்தா, அங்க நம்ம விட்டில் மாஸ்டர் அடி பின்றாருன்னு அர்த்தம். ஷார்ஜா பைனல்ஸ்ல, இல்லெஸ்பி பந்தை லாங் ஆனுக்கு விசிறியடிச்ச ஸிக்ஸரும், அதுக்கு கமென்டேட்டர் டோனி கிரேக் 'வ்வாட்... ஏஏஏ...சிக்ஸர்'னு அலறியதும் இன்னைக்கு

"நட்பு பற்றி நாலு பேர் சந்தோஷமா சிரிக்கிற மாதிரி ஏதாவது எழுதித்தாங்க'ன்னு ஆசிரியர் சொன்னதும், நம்ம பேனா தோழ'மை'யோட எழுதியவைதான் இவை. சம்பந்தப்பட்ட பாடலாசிரியர்கள் 'சிநேகமுடன்' மன்னிக்கவும்.



## எனக்கொரு சிநேகிதி! சிநேகிதி!

எனக்கொரு சிநேகிதி! சிநேகிதி!
வூசு மாதிரி!
அவ பேசுவா, பேசுவா
நட்டு கழண்ட மாதிரி
உன் முகம் பார்க்கத் தோன்றினால்
நரிமுகம் பார்த்துக்
கொள்ளுவேன்!
நீ வரும் சத்தம் கேட்டிட்டா
எப்படியாவது எஸ்கேப்
ஆகுவேன்!



# மீசைக்கார நண்பா!

மீசக்கார நண்பா!
உனக்கு வொள்ளு அதிகம்டா!
வொள்ளு அதிகம்டா!
நீ விட்ட ஜொள்ளும் அதிகம்டா!
ஒரு ஃபிகரையும் நீ விடலியே!
உனை ஒரு ஃபிகரும் லுக்
விடலியே!
இருந்தும் நீ திருந்தலியே!
உனை திருத்தவே மருந்தில்லியே!
மீசக்கார நண்பா!'

## முஸ்தபா... முஸ்தபா

முஸ்தபா... முஸ்தபா
'பார்ட்டி' வை முஸ்தபா!
பசையுள்ள பார்ட்டி நீதான்பா!
டே பை டே, டே பை டே
நீ என்னிக்கு உருப்பட்டே!
துவைக்காத ஜீன்ஸே
ஃபேஷன்ப்பா!'



## 'தோழா தோழா...

நட்புக்குள் வெலஸ்தை
கிடையாது
நட்புக்குள் சொரணை
கிடையாது
நட்புக்கு கண்-மண் தெரியாது!
நட்புக்கு வெட்கம் கிடையாது!

நட்பு என்னும் நூல் - விட்டு
பெஸ்ட் ஃபிகரை நீ மடக்கு!

நட்பு நட்புதான்
அப்பு அப்புதான்
நட்பு மாறலாம் - உன்
வாய்'கப்பு' மாறுமா?

## மனசே! மனசே!

மனசே! மனசே! மனசில் பாரம்!
எக்ஸாம் ஹாலில் நீயில்லா நேரம்!
இந்த பூமியில் உள்ள சொந்தங்கள்
எல்லாம்
ஏதேதோ எதிர்பார்க்குமே!
இந்தக் கல்லூரி நண்பன் நான்
மட்டும்தானே
உன் பேப்பர் எதிர்பார்ப்பேனே!
மனசே... மனசே...!



கவிச்சிற்றரசு
உல்டாதாசன்

## கிழக்கே பார்த்தேன்

கிழக்கே பார்த்தேன் -
மேற்கே வந்தாய்
அன்புத் தோழி
நீ சொன்னதை என்னிக்கும்
செஞ்சதே இல்ல -
வம்புத்தோழி, தனிமையில்
என்னை விடாம துரத்தும்
சண்டைக் கோழி!
உன் டார்ச்சர் தாங்காம
பீச்சுக்குப் போறேன், டாட்டா
தோழி!



# ஓடாதே...ஒளியாதே!

வி.குலோத்துங்க சோழன்

**டிடெக்டிவ் இன்டர்நேஷனல் நிறுவனத்தின் டைரக்டர் ஜெனரலான வி. குலோத்துங்க சோழன் தங்கள் நிறுவனம் கையாண்ட இரு சுவாரசியமான வழக்குகளை இங்கு விவரிக்கிறார்.**

“தன் கணவர் குடும்பத்தின் மீது மிகவும் பாசமுள்ளவர் என உறுதியாக நம்பினார் உதயா. ஆனாலும் அவ்வப்போது அவர் மனத்தில் இன்னதென்று இனம் காண முடியாத சந்தேகம் முளைவிட்டுக் கொண்டிருந்தது.

இரு வாரங்களுக்கு முன் அவர் அலுவலகத்தைத் தொலைபேசியில் தொடர்பு கொண்ட போது “யாரு, ஆனந்தன் சாரா? அவர் இன்னிக்கு லீவாச்சே” என்று பதில் வந்தது. ‘ஒரு சிவில் என்ஜீனியரென்றால் அடிக்கடி வெளியில் போகத்தானே வேண்டியிருக்கும்? அது தெரியாமல் அவர் விடுப்பு எடுத்துக் கொண்டதாகத் தப்புத் தகவல் சொல்கிறான் இவன்’ என்று தன்னையே சமாதானப்படுத்திக் கொண்டாள் உதயா.

ஆனால் மகளின் திருமணத்துக்காக ஏற்படக்கூடிய செலவுகள் குறித்துப் பேசியபோது, அந்தப் பேச்சைத் தவிர்த்தார் ஆனந்தன். பிறகு தன்னிடம் அவ்வளவு பணமில்லையென்று எரிந்து விழுந்திருக்கிறார். கணவரின் மென்மையான சுபாவத்தையும் நல்லெண்ணத்தையும் பயன்படுத்தி, அவரை யாரோ ஏமாற்றிப் பணம் பறிக்கிறார்களோ என்ற கவலை ஏற்பட, எங்களை அணுகினார். பிரச்னைகளைக் கண்டுபிடிப்பதோடு விடாமல், அவற்றைத் தீர்க்கவும் முயற்சிப்பது எங்கள் வழக்கம்.

தீர ஆராய்ந்ததில் ஆனந்தன் ஒரு





பெண்பித்தர் என்பது தெரிய வந்தது. சம்பளத்தில் பெரும்பகுதி இதற்கே செலவாகிவிட்டதால், சேமிப்பு என்பதே இல்லாமல் போயிருந்தது.

நன்கு யோசித்து ஒரு திட்டம் போட்டோம். நாங்களே சில சிவப்பு விளக்குப் பெண்களை செட் அப் செய்து பழக விட்டோம்.

ஆனந்தனுக்குப் பெருமை பிடிபடவில்லை. இப்போதெல்லாம் அழகுப் பதுமைகள் தானாகவே வலிய வந்து சிக்குகிறார்களே! தன் ஆண்மை குறித்து மேலும் கர்வப்பட்டார்.

அன்று ஆனந்தன் வீட்டில் தனியாக இருந்தபோது அந்தத் தொலைபேசி ஒலித்தது.

"ஆனந்தா, நீ ஒரு சிவில் என்ஜினியர், அது எங்களுக்குத் தெரியும்" என்றது ஒரு கரகரப்பான ஒரு குரல். பின் தான் தீவிரவாத இயக்கத்தைச் சேர்ந்தவன் என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டது. ஆனந்தன் அதிர்ந்தார்.

"இதுக்கே அதிர்ச்சி அடைஞ்சா எப்படி? எங்களுக்காக ஒரு பாலம் கட்டித் தரணும். ரகசிய வேலை. பணம் நிறையத் தருவோம்."

"நோ நோ."

ஆனந்தன் சட்டென ரிசீவரை வைத்துவிட்டார். இதென்ன புதுச் சிக்கல்? நண்பர்கள் யாராவது விளையாடிப் பார்க்கிறார்களா?

சற்று நேரத்தில் மீண்டும் தொலைபேசி அழைப்பு. அதேகுரல். "நீ எங்க கோரிக்கைக்கு நோ சொல்ல முடியாது. செஞ்சுதான் ஆகணும். சாந்தி ஞாபகம் இருக்கா? கார்த்திகா? மோகனா? பிரமிளா?"

ஆனந்தனின் கைகள் நடுங்கத் தொடங்கின.

"இவங்க எல்லாருமே நாங்க அனுப்பி வைச்ச பொண்ணுங்கதான். அவங்ககூட நீ நெருக்கமா இருந்தப்போ எடுத்த புகைப்படங்களும், விடியோவும் எங்ககிட்டேதான் இருக்கு. அதையெல்லாம் எங்கே அனுப்ப? உன் மனைவியிடமா? உங்க ஆபீஸ் நிர்வாக அதிகாரிக்கா? இல்ல பத்திரிகைகளுக்கா?"



எங்கள் திட்டம் வேலை செய்யத் தொடங்கியது.

தொலைபேசி ஒலிக்கத் தொடங்கினாலே ஆனந்தன் நடுங்கத் தொடங்கினார். பிற பெண்களின் சகவாசத்தை அறவே விட்டுவிட்டார்.

பத்து நாட்களுக்கு ஆபீஸ் போகவில்லை. உதயாவையும் விடுப்பெடுத்துக் கொள்ள வைத்துவிட்டார். அவள் சமையலறைக்குப் போனால்கூட கூடவே வந்தார்.

அவர்களது சொந்த வீடு நகரிலிருந்து தள்ளியிருந்தது. அதை வாடகைக்கு விடலாமெனத் திட்டமிட்டிருந்தார்கள். ஆனால் அந்தத் திட்டத்தை மாற்றிக் கொண்

**1960**ல நான் மும்பையில வேலை செய்து கொண்டிருந்தேன். அப்போதுதான் 'ஹிந்து' பாலு அறிமுகமானார். பழக இனிமையானவர். கலா ரசிகர். இருபது வருஷங்களுக்குப் பிறகு மியூஸிக் அகாடமியில் என்னுடைய ஹரி கதை நிகழ்ச்சி நடந்தபோது, என்னைப் பார்த்து "ஆராவமுது... நீயாடா!" என்று கட்டிக் கொண்டுவிட்டார். சமீபத்தில் எனக்கு 'சங்கீத கலா சிகாமணி' பட்டமும், அவருடைய சகோதரி லக்ஷ்மி விஸ்வநாதனுக்கு 'நாட்டிய கலா சிகாமணி' பட்டமும் கிடைத்தபோது, "ஆஹா, ஒரே மேடையில் நண்பனும், தங்கையும் விருது வாங்கும் காட்சியைப் பார்க்கும் பேறு கிடைத்ததே" என்று குதூகலித்தார்.

# நட்பு



• கல்யாணபுரம் ஆராவமுதன்

டார். அடுத்த வாரமே அங்கு குடும்பத்தோடு குடியேறினார் ஆனந்த். இந்த மாறுதலுக்கு மறுத்த மகனிடமும் மகளிடமும் கெஞ்சிக் கொஞ்சி, சம்மதம் பெற்றார். அதோடு இருந்த தொலைபேசியையும் சரண்டர் செய்துவிட்டு, எண்கணித சாஸ்திரப்படி கூட்டுத்தொகை மூன்று என வரும் தொலைபேசி இணைப்பைப் பெற்றுக் கொண்டார். அதுதான் அவருக்கு ராசி எனப் புளுகினார்.

எப்போது கூப்பிட்டாலும் அலுவலகத்தில் இருந்தார். சம்பளமும் முழுதாக வீட்டுக்கு வரத் தொடங்கியது. ஆக சிக்கல் முழுவதுமாகத் தீர்ந்தது.

"குடும்பப் பிரச்னைகள் என்றில்லை. பெரிய நிறுவனங்களுக்கும் துப்பறியும் பணியைச் செய்து கொடுப்பதுண்டு.

மருந்து தயாரிக்கும் ஒரு பெரிய நிறுவனம் அது. தன்னுடைய ஊழியர்களின் 'மறுபக்கத்தை' அறிந்து கொள்வதற்காக எங்களை அணுகியது. ஒப்புக் கொண்டோம். ஆனால் அதற்கான எங்கள் ஊதியத் தொகையைக் கூறியபோது அந்த நிறுவனம் 'அப்புறமாக பார்த்துக் கொள்ளலாம்' என்றபடி பின்வாங்கிவிட்டது.

ஆறு மாதங்கள் ஆகியிருக்கும். அலறியடித்துக் கொண்டு வந்து நின்றார் அந்த நிறுவனத்தின் தலைவர்.

ஒரு புதிய மருந்தின் ஃபார்முலாவை அறிந்து வைத்திருந்த, அவர்கள் நிறுவனத்தை சேர்ந்த விஞ்ஞானி செல்வா என்பவரை சில நாட்களாகக் காணவில்லையாம். ஏதாவது எதிரி முகாமுக்கு (பிற போட்டி நிறுவனம்) விலை போய் விட்டாரோ என்ற சந்தேகம்.

மேலும் விசாரித்துப் பார்த்ததில் எலும்புருக்கி நோய்க்கான மருந்து அது என்பதையும், அதைத் தயாரிக்கத் தேவைப்படும் சில ரசாயனங்கள் வெளிநாட்டிலிருந்துதான் இறக்குமதி செய்யப்பட வேண்டும் என்பதும் தெரிய வந்தது. அடுத்த நாட்களில் எங்கள் உளவாளிகள் மூலம் அறிந்த தகவலின்படி, அந்த குறிப்பிட்ட ரசாயனங்களின் சாம்பிள்கள் ஹைதராபாத்துக்குச் சென்றதை அறிய முடிந்தது. அங்கே அவர்களது போட்டி நிறுவனம் ஒன்றும் இருந்தது தெரியவர, அந்த நிறுவனத்துக்குதான் விஞ்ஞானி செல்வா விலை போயிருக்கிறார் என்பதை யூகிக்க முடிந்தது. தீவிரமாகத் திட்டமிட்டோம்.

ஒன்பது பேர் கொண்ட எங்கள் குழு வெவ்வேறு விமானங்களில் ஹைதராபாத்துக்குச் சென்றது. மூன்று வெவ்வேறு ஸ்டார் ஹோட்டல்களில் தங்கினோம்.

தேடிப்பார்த்ததில் செல்வாவுக்கென ஒதுக்கப்பட்டிருந்த வீட்டில், அவரது மனைவி மட்டுமே இருந்தது தெரிந்தது. போட்டி நிறுவன அலுவலகத்தில் செல்வா இல்லை. எங்கோ தனியான

இடத்தில் அவரைப் பாதுகாப்பாகத் தங்க வைத்திருக்கிறார்கள் என்பது புரிந்தது. ஆனால் எங்கே? விளங்கவில்லை. என்றாலும் பொங்கல் திருவிழா நெருங்கியதால் ஒரு நம்பிக்கை.

எப்படியும் பொங்கலுக்குத் தமது வீட்டுக்கு வந்து விடுவார் என நம்பி, அவர் வீட்டைச் சுற்றி உளவாளிகளை நிறுத்தினோம். பால் விற்கும் பையனை அனுப்பி "எக்ஸ்ட்ரா பால் வேணுமா?" எனக் கேட்க வைத்தோம். அப்படியே உள்ளே செல்வா இருக்கிறாரா என்பதை ஜாடைமாடையாகப் பார்க்கச் சொன்னோம்.

"உள்ளே ஒரு ஆள் இருக்கார்!" என்றான் அந்தச் சிறுவன். எமகாதகர். எப்படியோ நுழைந்துவிட்டிருக்கிறார். இனி பொறுக்கக் கூடாது எனத் தீர்மானித்து உள்ளே நுழைந்தோம். நைச்சியமாகப் பேசி வெளியே அழைத்துச் சென்றோம். "நீங்கள் இதற்கு முன்னாலே வேலை செய்த நிறுவனத்தின் தலைவர் மீது ஒரு வழக்கு. அது தொடர்பாக உங்கள் சாட்சியும் தேவைப்படுகிறது" என்றோம். வெளியிலிருந்து தன் வீட்டுக்கு அவரை போன் செய்ய வைத்தோம். "ஒரு சாட்சியத்துக்காக நான் உடனே போக வேண்டிருக்கிறது. இங்கே யாரும் என்னை துன்புறுத்தவில்லை. சீக்கிரம் வந்துவிடுவேன்" என்று தன் மனைவியிடம் அவர் கூற, அதை ஒலிப்பதிவு செய்துகொண்டோம். வெவ்வேறு டாக்ஸிகளில் மாறி சென்னைக்கு வந்தோம். இதற்குள் போட்டி நிறுவனத்துக்கு இது தெரிந்துவிட, ஹைதராபாத்தைச் சேர்ந்த ஒரு டஜன் வழக்கறிஞர்கள் 'அவரை நாங்கள் கைது செய்யக்கூடாது' என்று வழக்குத் தொடுத்தனர்.

நாங்கள் அந்த விஞ்ஞானியின் இருப்பிடத்தை ரகசியமாக வைத்திருந்தோம். போட்டி நிறுவனத்தின் தூண்டுதலின் பேரில், "என் கணவரைக் கடத்தி விட்டார்கள். எங்கே அவர்?" என்று நிறுவனத் தலைவரின் வீட்டுக்கு தொலைபேசியில் பேச, நிறுவனத் தலைவரின் மனைவி "எனக்கு அதெல்லாம் தெரியாது. இங்கு யாரும் இல்லை" என்று கூறிவிட்டார்.

சுமார் நான்கு மாதங்களுக்கு அந்த விஞ்ஞானியை வெளி உலகுக்குக் காட்டாமல் மறைத்து வைத்திருந்தோம். இதற்குள் அவரிடம் பல கோணங்களில் பேசி, வேலை செய்த நிறுவனத்தின் ரகசிய ஃபார்முலாவை, எதிரணிக்கு கடத்திச் சென்றால் அது நிரூபிக்கப்படும்போது எந்த வகையான தண்டனை கிடைக்கும் என்பதையெல்லாம் கூறி, அவர் மனதை மாற்றினோம்.

ஆக எங்களது வாடிக்கையாளரான நிறுவனம் பெரும் சிக்கலிலிருந்து தப்பியது. தொடக்கத்திலேயே தன் ஊழியர்களைப் பற்றி எங்களை ஆராய விட்டிருந்தால், இந்த விஞ்ஞானி விலை போகக் கூடிய தன்மையை எடுத்துக் கூறி எச்சரித்திருக்கலாம். இவ்வளவு பெரும் தொகை அப்போது செலவாகியிருக்காது.

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**

## நட்பு

**உ**யிர்த்தோழின்னா பெரியம்மா மகள் இந்திராவைத்தான் சொல்லணும். ஒரே வயசு, ஒரே ஜாடை, ஒரே விருப்பம்னு நல்ல பொருத்தம்! எழும்பூரில்தான் இருக்காங்க. அடிக்கடி சந்திக்கிறதோ, போனிலே பேசிக்கிறதோகூடக் கிடையாது. ஆனா எப்ப சந்திச்சாலும், விட்ட இடத்திலிருந்து அதே அன்போடு நட்பு தொடரும்.


• ரமணி சந்திரன்

# இந்த விஷயம் சதா சொல்றதை தாளு

**நடிகை சதாவுக்கு, துணிக்கடைக்கு மட்டும்தான் வழி காட்ட முடியும்னு நினைச்சுடாதீங்க... அழகா அட்வைஸ் பண்ணவும் தெரியும். சாட்சிக்கு அவர் தரும் சில நட்பு டிப்ஸ் இதோ...**

1 ● நீங்க நினைக்கிற மாதிரியே நினைச்சு, நீங்க சொல்றதுக்கெல்லாம் 'ஜிங்சக்' போட்டு, பின்பாட்டுப் பாடறவங்க மட்டும்தான் ஃப்ரெண்ட்ஸுன்னு நினைச்சுடாதீங்க... எதிரிடையா யோசிச்சு, வேற மாதிரி செயல்படறவங்களையும் உங்க செட்டுல சேர்த்துக்குங்க... இல்லன்னா, நட்பே போரடிச்சுடும்!

2 ● கேளுங்க... கேளுங்க... கேட்டுக்கிட்டே இருங்க! மத்தவங்க பேசறதை காது கொடுத்துக் கேளுங்க! கண்களைப் பார்த்துக்கிட்டே கேளுங்க. சின்ன புன்சிரிப்போட கேளுங்க. நட்பு பலப்பட இதைவிடச் சிறந்த வழி இல்லை!

3 ● அலட்டல், பந்தா ஏதும் மிச்சம் மீதி இருந்தா, பாலிதீன் கவர்லே போட்டு சுனாமி அலையோரமா எறிஞ்சுடுங்க! எளிமையா, ஃப்ரீயா இருந்தாதான் மத்தவங்க நெருங்குவாங்க!

4 ● 'நட்பு என்பது நட்புக்காகவே! காசோ, உதவியோ வேறு எதையோ எதிர்பார்த்து அல்ல!' என்பதில் உறுதியா இருங்க... நேர்மை முக்கியம்!

5 ● உங்களைப் பற்றியே பேசாமல், நண்பர்களின் ஆர்வங்கள் பற்றியும், ரசனைகள் பற்றியும், ஆழ்ந்த ஈடுபாட்டோடு கேள்விகள் கேளுங்க. இல்லன்னா, நட்பு, ஒன்வே ட்ராபிக் ஆகி ஊத்திக்கும்!

6 ● நீங்க முந்திக்கணும்... 'பந்தி'க்கு இல்லீங்க. 'மூவ்' பண்ண! 'ஹாய்' சொல்லவோ, 'ஹலோ' சொல்லி வாழ்த்தவோ, முதல் ஆளா நீங்க இருந்தீங்கன்னா, நட்பு ஃபெவிக்கால் போட்டது மாதிரி ஒட்டிக்கும்!

7 ● ஏதாவது கஷ்டம் நஷ்டம்னு வந்தா மட்டும் நண்பர்களைத் தேடிப் போகாதீங்க... சந்தோஷத்துலேயும் அவங்களைக் கூட்டிக்கிங்க!



- அனு



மனிதன் தானாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் சிறிய சுதந்திரங்களில் ஒன்று நட்பு. காசு, பணம்னு எதையும் எதிர்பாராமல், மண்ணை விட்டுப் பிரியும் வரை கூடவே வரும் பரிசுத்தமான நட்பு சாமானியர்களிடமும் உண்டு என்பதை நிரூபிக்கிறார்கள் இவர்கள்.

**செல்வம், ஜார்ஜ் - முத்துராமன்**

செல்வம், ஜார்ஜ் இருவரும் பார்வையின்றியே இவ்வுலகைக் காணும் சக்தி படைத்தவர்கள். தினமும் மெட்ரோ ரெயிலில் பேட்டரி, செல்போன் கவர் விற்று உழைத்துப் பிழைப்பவர்கள். நங்கநல்லூரிலிருக்கும் முத்துராமனுக்கு தினமும் பல்லாவரத்துக்கு வந்து இவர்களைப் பார்க்கா விட்டால் தூக்கம் வராது.

''நான் மேஸ்திரிங்க. ஆறு மணிக்கு வேலை முடிச்சுட்டு, எங்க இருந்தாலும் இவங்களைப் பார்க்க ஓடோடி வந்துடுவேன். டீ, டிபன் ஏதாவது சேர்ந்து சாப்பிடுவோம். அப்புறம் பேசி சிரிச்சிட்டு அவங்க படுக்கப் போனபிறகு நான் வீட்டுக்குக் கிளம்பிடுவேன்'' என்றபோது தன் உயிர் நண்பனின் கன்னத்தைத் தேடிப் பிடித்து வருடுகின்றனர் இருவரும். ''முத்துராமனோட நட்பு இல்லாட்டா, ஏண்டா பொறந்தோம்ங்கிற எண்ணம் வந்து வாழத் தெரியாம இருந்திருப்போம். இவரு எங்களுக்குக் கண்ணுக்குக் கண்ணா இருக்கிறாருங்க'' என்று வானத்தைப் பார்த்துப் பேசிய போது, அருகிலிருந்தவரின் கண்களில் நீர் முட்டியது.

**மதனகோபால் - மனோகர்**

சிவப்பு உடையில் வெள்ளை மனங்களுக்குச் சொந்தக்காரர்கள் இருவரும்.

''இவந்தாங்க பதிமூணு வருஷமா நம்ம தோஸ்து'' என்று மதனகோபால் கூற, ''ஹேய், நீயெல்லாம் எனக்கு

# ''நீ எல்லாம்

• முத்துராமன் - செல்வம் - ஜார்ஜ்





• மதனகோபால் - மனோகர்

ரீட்டா - ஷகீரா
(புதுப்பேட்டை மார்க்கெட்)

புதுப்பேட்டை மார்க்கெட்டில் ரீட்டா - ஷகீராவின் நட்பு ஏகப் பிரபலம்.

''நான் மளிகைக் கடை வைச்சிருக்கிற இந்து. இவ காய்கறி வியாபாரம் செய்யற முஸ்லீம். எங்க நட்புக்குத் தடையா மதமோ, தொழிலோ எதுவும் வந்ததில்லை. ஏய்... நீதியை நீ சொல்லுடி'' என்று உயிர்த் தோழியைத் தட்டிவிட, ''ஆமாங்க. நேருக்கு நேர் என் குறைகளைச் சொல்லுவா. வெளிப்படையா பேசறதுதான் எங்களோட பொதுவான குணம். ஆயுசுக்கும் நீடிக்கணும் எங்க நட்பு'' என்று சட்டென

# ...ஃப்ரெண்டா?''

• ஷகீரா - ரீட்டா




ஃப்ரெண்டா?'' என்றபடி சிவப்புத் துண்டால் நண்பனின் கழுத்தை ஜாலியாக இறுக்குகிறார் மனோகர்.

''நான் மதுராந்தகம், இவன் ஆலப்பாக்கம். கிட்டத்தட்ட ஒரே ஊர்க்காரங்கதான். ஆனா இந்த எக்மோர் ஸ்டேஷன்லதான் சந்திச்சுக்கிட்டோம். அடிக்கடி என்கிட்ட முறுக்கிக்கிட்டாலும் பாசமான பையன். ஊருக்குப் போய் திரும்பி வரும்போது, எனக்கே தெரியாம என் ரூம்ல அரிசி மூட்டை, காய்கறி, கரும்பு எல்லாம் வைச்சுட்டு நைஸா போயிடுவான்'' என்ற நண்பனை இடைமறித்து ''நான் இன்னைக்கு இவனுக்கு ஏதாவது செஞ்சு நாளைக்கு எனக்குத் திருப்பி ஏதும் செய்யலைன்னா, அடி பின்னிற மாட்டேன்'' என்றபடி மனோகர் ஓரக் கண்ணால் பார்த்து நமுட்டுச் சிரிப்பு சிரிக்கிறார்.

ஷகீரா அழுதபோது, ரீட்டாவின் கைகள் தன் தோழியின் கண்களை நோக்கிச் சென்றன.

பேட்டி, படங்கள்: **நீலாவள்ளி**

# பிள்ளையார் பிறந்த

## எங்க ஊர் பிள்ளையார்

எல்லா எழுத்துக்களுக்கும், ஓசைகளுக்கும், வேதங்களுக்கும் மூலமாகவும், முடிவாகவும் விளங்குவது 'ஓம்' என்ற பிரணவம். அப் பிரணவ ரூபமாக விளங்குபவர் பிள்ளையார். விநாயகர் பிரணவத்திலிருந்து வெளிப்பட்டதால், முதலும் முடிவும் இல்லாத முழு முதற் கடவுளாகப் போற்றப்படுகிறார்.

திருக்கயிலாய மலையில் ஏழு கோடி மந்திரங்கள் அடங்கிய சித்திர மண்டபம் இருந்தது. ஒருநாள், நல்ல இளவேனிற் காலத்தில், சிவபெருமான், உமாதேவியோடு அந்தச் சித்திர மண்டபத்துக்கு எழுந்தருளினார்.

மண்டபச் சுவர்களில் வரையப்பட்டிருந்த சித்திரங்களை இருவரும் பார்வையிட்டுக் கொண்டே வந்தனர். அவற்றில் மகாமந்திரம், பிரணவ மந்திரத்தினூடே சித்திரம் ஒன்றைப் பார்த்ததும் உமாதேவி அங்கேயே வியப்புடன் நின்றுவிட்டார். ஏழு கோடி மந்திரங்களுக்கு நடுவே சமஷ்டிப் பிரணவம், வியஷ்டிப் பிரணவம் என்ற இரு பிரணவங்கள் ஒலி செய்துகொண்டிருந்தன. அந்த மகா மந்திரங்களை, சக்தியும் சிவனும் திருக்கண் சாத்தி அருளினார்கள். அந்த இரு பிரணவங்களும் ஒன்றோடு ஒன்று மருவ, கூடலின் முடிவில் பிரணவ சொரூபமான விநாயகர், கோடி சூரியப் பிரகாசத்துடன் அங்கு தோன்றினார். அம்மையப்பனாரின் அடிமலர்களை வணங்கி நின்றார்.

செம்மை நிறமுள்ள அழகு மகவை, அன்போடு வாரி அணைத்து, உச்சி முகர்ந்து உவகை கொண்டு, மடி மீது வைத்துக் கொண்டாடினார்கள்.

"மகனே.. உலக ரக்ஷணைத்துக்காக உண்டாக்கப்பட்டவன் நீ! என்னில் வேறாகாமல், எனக்குக் குமாரனாக அவதரித்திருக்கும் உன்னை யார் வணங்குகிறார்களோ, அவர்கள் சகல நற்பாக்கியங்களையும் அடைவார்களாக! என்னுடைய கணங்களுக்கெல்லாம் நீயே தலைவனாக இருந்து, கணபதியாக விளங்குவாய். தேவர்களுக்கெல்லாம் துன்பத்தைப் பெருக்கி வரும் கஜமுகன் என்ற கொடிய அசுரன் இருக்கிறான். அவனோடு நீ விரைவில் யுத்தம் செய்து அவனை அழித்து, தேவர்களின் துயரத்தைத் தீர்ப்பாயாக!" என்று வாழ்த்தி அருளினார் சிவபெருமான். கணங்களுக்கெல்லாம் தலைவரானதால், 'கணபதி', 'கணேசர்', 'கணாதிபன்', 'கணநாதர்' என்ற திருநாமங்களைப் பெற்ற பிள்ளையார், மூவரும் தேவரும் போற்றும் தனிப் பெருந் தெய்வமாக அருள்பாலிக்கிறார்.



• ஆதிவிநாயகர்

# கதை!

## முருகனைப் போலவே அழகு!

எதிர்பக்கத்தில் காட்சி தரும் விநாயகர், ஆதி விநாயகர் என்றும், நரமுக விநாயகர் என்றும் அழைக்கப்



படுகிறார். விநாயகர் ஆதியில் மனித முகத்துடன் இருந்தார் என்றும், பிற்பாடுதான் யானைத்தலை வந்தது என்றும் சொல்வதுண்டு. முருகனைப் போலவே அழகாக

இருந்தாராம். சென்னை சின்மயாநகர் அருகே இருக்கும் குமரன் நகரில் ஸ்ரீகற்பக விநாயகர் ஆலயம் உள்ளது. அங்கிருக்கும் ஸ்ரீ கற்பக விநாயகருக்குத்தான் இப்படி சந்தனக் காப்பு அலங்காரமும், உருவ மாற்றமும் செய்யப்பட்டுள்ளது. தெய்வீகக் கலையலங்காரங்களில் விற்பன்னரான மடிப்பாக்கம் கண்ணன் செய்த அலங் காரம் இது!

தமிழ்நாட்டில் ஆதிவிநாயகர் (நர முக விநாயகர்) ஆலயம் மாயூரம் - நன்னிலம் பாதையில், சிலா தர்ப்பணிபுரி என்ற இடத்தில் மட்டும் உள்ளது. சிலா என் றால் எள், இங்கு தர்ப்பணம் முதலியவற் றையும் செய்யலாம்.

- நியோகி,
சென்னை - 92

## வெற்றி விநாயகர் வழிபாடு

அருள்நிதி நாயகமே
ஆனைமுகத்தானே
பொருள்நிதி வேண்டியே பொற்பதம்
பணிந்தேனே
ஞான நிதியும் தந்து ஞாலத்தில்
நான்வாழ நல்வாழ்வு
தருவாயே. ஓம் ராஜ கணபதியே
நமோ, நமஹ.'

- எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சென்னை - 78

## பிள்ளையாரின் வாகனங்கள்

விநாயகப் பெருமானின் வாகனம் 'மூஷிகம்' என்பர். அதாவது பெருச்சாளி என்று சொல்வது உண்டு. ஆனால், விநாய கரின் வாகனமாக சிங்கம், மயில், குதிரை, யானை, காளை முதலியவையும் வாகன மாக இருந்திருக்கின்றன.

நாகை 'நீலாயதாட்சி' அம்மன் கோயிலிலும், திருவொற்றியூர் தியாக ராஜர் கோயிலுக்கு முன் அமைந்திருக்கும் ஸ்ரீதட்சிணாமூர்த்தி கோயிலிலும், சிம்ம வாகனத்தில் பஞ்ச முகங்களுடன் அருள் புரிகிறார்.

பாண்டிச்சேரி மணக்குள விநாயகர் ஆலயத்தில் கதை வடிவத்திலும், திருவா னைக்கா அகிலாண்டேஸ்வரி திருக் கோயிலில் உள்ள சித்திரத்திலும், அருப்புக் கோட்டை தாதன்குள விநாயகர் கோயிலிலும், விநாயகப் பெருமான் மயில் வாகனத்துடன் காட்சி தரு கிறார்.

கோவை குருப தேசிக கவுண்டர் கோயிலிலும், கடலூர் சென்னியப்பன் நாயக்கன் பாளையம் மலையாண்டவர் கோயிலிலும், விநாயகர் குதிரை வாகனத் துடன் அருள் புரிகிறார்.

சுசீந்திரம் தாணுமாலயன் ஆலயத் திலும், நெல்லை காந்தியம்மன் கோயில் விநாயகர் சன்னதி முன்பும் காளை வாகனம் இருப்பதைக் காண முடியும்.

ஸ்ரீவில்லிபுத்தூர் மடவார் வைத்திய நாத சுவாமி ஆலயவாயிலில் அருள் புரியும் கல்யாண விநாயகரும், திருச் செந்தூர் ஆவுடையார் குளக்கரை யிலுள்ள அரசாள்வார் விநாயகரும், யானை வாகனத்துடன் காட்சி தருகிறார்கள்.

விநாயகப் பெரு மான் எந்த வாகனத் தில் காட்சி தந்தா லும், பக்தர்களுக்கு அருள் புரிவதில் அவருக்கு நிகர் எவரும் இல்லை.

- டி. ஆர். பரிமளம்,
திருச்சி - 21

## நட்பு

• ஷ்யாம்கணேஷ்



லக்ஷ்மண பிரபு என் னோட நெருங்கிய தோழர். 95ல நான் சென்னைக்கு முதன் முதலா வந்தப்போ 'ஹலோ'ன்னு வரவேற்றவர் அவர்தான். ஒவ்வொரு புது வருஷத்துக்கும் அவர்கிட்ட இருந்து ஏதாவது பணம் வாங்கறது ராசியாயிருக்கு!

# இன்றைக்கு

பொதுத்தொண்டு செய்யப் புறப்படுகிறவர்கள் பண விஷயத்தில் ரொம்பவும் ஜாக்ரதையாயிருக்க வேண்டும். நல்ல ஆதரவு திரவிய ஸஹாயமாகவும் நம் கார்யத்துக்குக் கிடைத்தால்கூட அதனால் over-enthusiastic ஆகி (அதீத உத்ஸாஹம் அடைந்து), நிறையப் பணம் 'கலெக்ட்' பண்ண ஆரம்பிக்கக் கூடாது. இப்படி ஆரம்பித்தால் அதற்கு ஒரு முடிவே இருக்காது. இதனாலே, பரோபகாரம் என்கிற அன்பு எண்ணத்தை 'வசூல் எண்ணம்' முழுங்கிவிடும். எப்போது பார்த்தாலும் ரசீது புஸ்தகமும் கையுமாக அலைவதும், 'பேப்பர் காரர்களைப் பிடித்து அப்பீல் பண்ணலாமா, அட்வர்டைஸ்மென்ட் பிடித்து ஸோவனீர் போடலாமா?' என்பதே சிந்தையாகத் தவித்துக் கொண்டிருக்கும்படியும் ஆகும். நிறையப் பணம் சேர்ந்து அதைக் கையாள வேண்டியிருக்கும்போது, நாமே எப்படி மாறிப் போய்விடுவோமோ என்ற பயம் ஸதாவும் இருக்கணும். அதுவுமில்லாமல், ரொம்பவும் பணம் சேர்த்தால் ஊரிலிருப்பவர்களுக்கும் அது ஸரியாகப் பிரயோஜனமாகிறதா என்ற ஸந்தேஹம் எழும்பும். இதோடுகூட, சற்றுமுன் சொன்ன மாதிரி, இஷ்டமில்லாதவனையும் நிர்ப்பந்தப்படுத்தி வாங்குவதும், இப்படி வாங்கிவிட்டதால் அப்புறம் அவனிடம் பந்தப்பட்டு நிற்பதும் நம் பணியையே அசுத்தம் செய்து விடும். ஆனதால் எந்த நல்ல காரியமானாலும் 'அதி'யாக அதைக் கொண்டு போய்விடாமல், அவசியத்தோடு நிறுத்திக் கொண்டு, செட்டும் கட்டும் சிக்கனமுமாகவே அதற்கான வரவு செலவுகளை நிர்வஹிக்க வேண்டும். பொதுத் தொண்டுக்கு மூல பலம் பணம் இல்லை, ஐக்யப்பட்ட மனம்தான் என்று புரிந்துகொள்ள வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



# பரத்தின் எனர்ஜி சீக்ரெட்!

"கேர்ள் ஃப்ரெண்ட்தானே வாழ்வின் பூஸ்ட் அல்லவா; கேர்ள் ஃப்ரெண்ட் இல்லா வாழ்க்கை, வேஸ்ட் அல்லவா?" என்று 'பாய்ஸ்' படத்தில் தடதடவென ஆடிக் கொண்டே பாடிய பரத்திடம் கேர்ள் ஃப்ரெண்ட் என்ற டாபிக் கொடுத்தவுடன், கொஞ்சம் வெட்கப் பட்டுக் கொண்டே பேச ஆரம்பித்தார்.



"எனக்குத் தெரிஞ்ச ஃப்ரெண்ட் ஒருத்தன் எல்.கே.ஜியிலிருந்து தன்கூடப் படிச்ச பொண்ணோட ஃப்ரெண்ட்ஷிப்பா இருந்தான். டென்த் படிக்கும்போது விவரம் புரிஞ்சு அது காதலா மாறி, வீட்டு சம்மதத்தோட அதே பொண்ணைக் கல்யாணமும் பண்ணிக்கிட்டு, இன்னைக்கு துபாய்ல செட்டில் ஆயிட்டான். ஃப்ரெண்ட்ஷிப்போ, லவ்வோ, புரிதல் ரொம்ப அவசியம்.

ஆனா இதே தலைகீழாகவும் நடக்க வாய்ப்பிருக்கு. பொண்ணுங்க ஃப்ரெண்ட்ஷிப்போடுப் பழகினாலும் பெரும்பாலான பசங்க அதை 'லவ்'வுன்னுதான் நினைச்சுப்பாங்க. பழகும்போதே தெரியணும், அந்தப் பொண்ணோட கண்களைப் பார்க்கும்போதே தெரியணும், அது லவ்வா நட்பான்னு.

'பாய்ஸ்'ல வந்த 'கேர்ள் ப்ரெண்ட்' பாடல் ஒரு மறக்க முடியாத அனுபவம். முதல்நாள் ஷூட்டிங்கின்போது பத்து, இருபது, முப்பதுன்னு சாரை சாரையா பொண்ணுங்க வந்துக்கிட்டே இருக்காங்க. கடைசியில எங்க அஞ்சு பாய்ஸையும் சுத்தி நூற்று ஐம்பது பொண்ணுங்க நின்னபோது, சந்தோஷத்துல தலைகால் புரியலை. அப்போதான் ஷங்கர் சார் பாட்டோட சிச்சுவேஷன் சொல்லி, பாட்டைப் போட்டுக் காண்பிச்சார். பாட்டும் சரி, பாடல் வரிகளும் சரி செம யூத்ஃபுலா இருந்தது."



இன்னைக்கு இருக்கிற பாய்ஸுக்குக் கேர்ள் ஃப்ரெண்ட்ஸ்தான் பெரிய பூஸ்டா இருக்காங்க. '7G' படத்துல



ரோஜாப்பூவை கொடுக்கலாமா,
தூக்கி எறியலாமான்னு இதுல முடிவெடுக்கறாங்க.

என்னுடைய பால்ய சிநேகிதன் ரூபராஜ்வின்ஸ்லோ. என் மேலே அப்படியொரு அன்பு. என்னை யாரும் தொடக்கூட விட மாட்டான். போட்டு அடிச்சுடுவான்! ஸ்டெட்லர் என்கிற காஸ்ட்லியான பேனாவைக் கொண்டு வந்து கொடுத்து, என்னை வரையச் சொல்லி ஊக்கப்படுத்தியதே அவன்தான். இப்ப லண்டன்லே இருக்கிறதா கேள்விப்பட்டேன். முதல்ல, எப்படியாவது பார்க்கணும்னு ஆசைப்பட்டேன். ஆனா, அவன் ரொம்பப் பெரிய பணக்காரனா இருக்கான்னு கேள்விப்பட்டதுலேயிருந்து, அந்த ஆசையை அப்படியே விழுங்கிட்டேன். எக்கச்சக்கமா பண உதவி எல்லாம் செய்ய ஆரம்பிச்சுடுவானேன்னு ஒரு பயம்...!




• பத்மவாசன்

''தூங்கறதுக்கு முன்னாடி கேர்ள் ஃப்ரெண்ட்கூட பேசாட்டி, முழு நாளும் கசக்குது''ன்னு வர்ற டயலாக் வடிகட்டின உண்மை. ஒரு காலேஜ் பையனுக்கு செல்போன், பைக், அப்பா காசை செலவழிக்கறதுக்கு ஒரு இடம், இதோட கூடவே கேர்ள் ஃப்ரெண்டும் நிச்சயம் தேவைப்படுது.

''டேட்டிங்'குற மேற்கத்திய கலாசாரம் நம்ம ஊர்லயும் பரவிக்கிட்டிருக்கு. லவ்வைச் சொல்றதுக்கு முன்னாடி ரிகர்ஸல் பார்த்து இதெல்லாம் நமக்குச் சரிப்பட்டு வருமான்னு செக் பண்ணிட்டு, கையிலிருக்கிற ரோஜாப் பூவைக் கொடுக்கலாமா, தூக்கி எறியலாமான்னு இதுல முடிவெடுக்கறாங்க.

என் ஆட்டோகிராஃபை படம் எடுத்தா, அதுல மல்லிகாவோ, கோபிகாவோ, ஸ்நேகாவோ யாரும் இருக்க மாட்டாங்க. ப்ளஸ் டூ வரைக்கும் பாய்ஸ் ஸ்கூல்ல படிச்சு, அதுக்கப்புறம் நியூ காலேஜுல படிச்சதால சின்ன வயசிலிருந்தே பெண்களின் சிநேகம் இல்லாமதான் நான் வளர்ந்திருக்கேன். இனிமேலும் எனக்கொரு கேர்ள் ஃப்ரெண்ட்டெல்லாம் தேவையில்லைன்னு நினைக்கிறேன். அதோட அதிலெல்லாம் எனக்கு நாட்டமும் கிடையாது. நான் இன்னைக்கு நடிகனாயிட்டேன். வெளியே போனா ஒவ்வொரு அசைவையும் வாட்ச் பண்றாங்க. அதனால இந்த லவ், கேர்ள்ஃப்ரெண்ட்ஸ் எதுவுமில்லாம வேலையில் மட்டும் கவனம் செலுத்தறதே நல்லதுன்னு நினைக்கிறேன்.

என் அனுபவத்துல ஒரு சுவாரஸ்யம் சொல்றேன், கேட்டுக்கோங்க. பெண்கள் தங்களோட நட்புல பெரும்பாலும் ஆண்களைத்தான் நம்புவாங்க. ஏன்னா, ஒரு பெண்ணின் மனம் எந்தவொரு விஷயத்திலயும் அப்படியா இப்படியான்னு இஷ்டத்துக்கு அலைபாயும். ஆனா பசங்க ஒரு முடிவெடுத்துட்டா, அதை சுனாமியாலகூட அசைக்க முடியாது!

ஏய்... இதெல்லாம் உனக்கு எப்படித் தெரியும்னு கேட்கறீங்களா? நானும் இந்த ஜெனரேஷன்தானே? எனக்கும் சென்னை, ஹைதராபாத், மதுரையிலெல்லாம் சில கேர்ள் ஃப்ரெண்ட்ஸ் இருக்காங்க. நான் சினிமாவுல நுழைஞ்சபோது, அந்த துப்பட்டாக்கள் ஆனந்தக் கண்ணீரோடு சொன்ன வாழ்த்துகள்தான் இன்றைக்கும் எனக்கு எனர்ஜி டேப்லட்டா இருக்கு!''

- ச.ந.கண்ணன்

படம்: ஸ்ரீஹரி



## தானாக ஒலிக்கும் மேளம்!

- சுவாரசியமான கதை

## யார் அந்தப் பிரபலம்?

- ஜாலி க்விஸ்

## கங்காருகளின் நாடு

- போவோமா புது உலகம்!

## பரீட்சை பயம்!

- மனமே நலமா?

## ஓபரா ஹவுஸ்

- போஸ்டர்

## பட்ஜெட் என்றால் என்ன?

- தெரிந்து கொள்ளுங்கள்!

## 1000/- ரூபாய் பரிசு!

- போட்டி

பிப்ரவரி 2005
ரூ. 6/-

வாங்கத் தவறாதீர்கள்!

*புதிய வடிவமைப்பில்*

# கோகுலம்

சிறுவர் மாத இதழ்

47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

# நண்பன் ஜ.பி.எஸ்

சுபா



பேசி முடித்து ரிசீவரை தொலைபேசியில் பொருத்தினேன். என் விரல்களில் மெலிதான அதிர்வுகள் இருப்பதைக் கவனித்தேன். பார்த்துக் கொண்டிருந்த கோப்பை மூடி வைத்துவிட்டு எழுந்தேன். தொப்பியை அணிந்தேன். அறையை விட்டு வெளி வந்தேன்.

எதிர்ப்பட்ட இளம் அதிகாரிகளின் சல்யூட்களை மென்மையாகத் திருப்பியவாறு காருக்கு நடந்தேன். டிரைவர் கதவை விறைப்பாகத் திறந்து பிடித்தான்.

"திருவல்லிக்கேணி" என்றேன்.

அரசாங்க வாகனம் உறுமி விட்டுப் புறப்பட்டது.

என் நண்பனைச் சந்திக்கப் போகிறேன்! அதுவும் எத்தனை காலம் கழித்து!

இருபத்து நான்கு வருடங்களாகிவிட்டன. அரவிந்தனைக் கடைசியாகப்





பார்த்து. மாநிலக் கல்லூரியின் மர நிழலில் அவனுடன் பகிர்ந்து கொண்ட சிகரெட்டின் வாசத்தை, இப்போது கூடத் தொண்டையில் அனுபவிக்க முடிந்தது.

அரவிந்தனைக் கல்லூரி நாட்களில் நீங்கள் பார்த்திருக்க வேண்டும். அபாரமாயிருப்பான். நெற்றியில் வந்து விழும் முடிக்கற்றையை அலட்சியமாக ஒதுக்கிக் கொண்டே அவன் பேசும் ஆங்கிலத்துக்கு மயங்காத பெண்களே இல்லை. ஏதாவது காரணத்தை வைத்துக் கொண்டு, அவனிடம் நோட் புத்தகத்தை வாங்குவதற்கு ஒரு தடவை, திருப்பித் தருவதற்கு ஒரு தடவை என்று பெண்கள் வந்து நிற்பதைக் கவனிக்கலாம்.

ஆங்கிலத்தில் மட்டுமல்ல, கொட்டிக் கிடக்கிற நட்சத்திரங்களைப் போலக் குழப்பமாகத் தெரியும் மற்றப் பாடங்களைக் கூட அவன் மிரட்சியுடன் பார்த்ததில்லை. வகுப்பு இல்லையென்றால், நூலகத்தில் அட்டை கிழிந்த தடிமனான புத்தகங்களைப் புரட்டி எதையோ எழுதிக் கொண்டிருப்பான். அவன் எழுதி வைத்த நோட்ஸ்களை அப்படியே பார்த்து எழுதிக் கொள்வேனே தவிர, அந்த

வரிகளுக்கு எல்லா நேரங்களிலும் எனக்கு அர்த்தம் புரிந்ததில்லை.

அரவிந்தனுக்கும் எனக்கும் கிரிக்கெட்டால் நட்பு இறுகிப் போனது. ஞாயிற்றுக் கிழமைகளில் இருவருமாக மைதானத்துக்கு ஒரே சைக்கிளில் போய், வெள்ளை உடைகளை அழுக்குப் பண்ணிக் கொண்டு திரும்புவோம்.

வருடத் தேர்வுகள் ஆரம்பித்தபோது, எனக்கு வந்த கனவுகளில் பெரும்பாலும் நான் கணக்குப் பரீட்சையில் மட்டும் தோற்றுப் போய், என் அப்பாவால் வீட்டை விட்டுத் துரத்தப்பட்டேன்.

கனவுதானே என்று அலட்சியப் படுத்த முடியாதபடி, நிஜத்திலும் கேள்வித் தாளை வாங்கியதும், என் அத்தனை நாடிகளும் ஒடுங்கின. சரிபாதி கேள்விகள் புரியவில்லை. எனக்கு முன்னால் உட்கார்ந்திருந்த அரவிந்தன் பக்கம் பக்கமாக எழுதிக் கொண்டிருந்தான். என் சட்டையெல்லாம் வியர்வையில் நனைந்து, கேள்வித் தாளை மூன்று நான்கு முறை புரட்டி விட்டேன். முதலில் தெரிந்ததாகத் தோன்றிய கேள்விகளும், பயத்தில் இப்போது அந்நியமாகிவிட்டன.

கிட்டத்தட்ட நாற்பது நிமிடம் வீணடித்தபின், எனக்கு அடி வயிற்றில் கலக்கம் வந்து விட்டது. காலை முன்னால் செலுத்தி அரவிந்தனின் பாதத்தைத் தொட்டேன். திரும்பினான். என் முகத்தைப் பார்த்ததும் புரிந்து கொண்டான். 'கவலைப்படாதே' என்று கண்களால் சைகை செய்தான். கூடுதல் தாள்களை வாங்கித் தன் மேஜையில் பரப்பிக் கொண்டான். ஏற்கெனவே எழுதியதை மிக நேர்த்தியாகக் கீழே தள்ளினான். என் தாள்களையும் இயல்பாகக் கீழே தவறவிட்டேன். பொறுக்கிக் கொள்ளும்போது, அவனுடையதையும் சேர்த்து எடுத்துக் கொண்டேன்.

'தப்பு இல்லையா' என்று மனசாட்சி ஒரு புறம் குத்தியது. 'முட்டாள், இது வாழ்க்கைப் பிரச்னை, தயங்காதே' என்று புத்தி இன்னொரு பக்கம் தட்டிக் கொடுத்தது.

அவன் எல்லாக் கேள்விகளையும் முடித்துவிட்டாலும், எதையோ எழுதுவது போல் பாவனை செய்து, எனக்காக எழுந்து கொள்ளாமல் இருந்தான்.

ஒவ்வொரு பதிலையும் வெட்கமில்லாமல் அவனுடைய பேப்பரிலிருந்து பார்த்து எழுதினேன். எல்லாவற்றையும் எழுதி முடித்து அவன் தாள்களைத் தள்ளினேன். அப்படித் தள்ளியபோது, தவறுதலாக என் விடைத்தாளும் சேர்ந்து நழுவிவிட்டது.

குனிந்த நிலையில் அவன் அவசரமாகப் பொறுக்கிக் கொண்டு நிமிர்ந்தபோது, பக்கத்தில் கண்காணிப்பாளர் நின்றிருந்தார். அவனிடமிருந்து எல்லாத் தாள்களையும் வாங்கிப் புரட்டினார்.

அச்சத்தில் என் உடை நனைந்தது.

''அரவிந்தன் என்ற ஞானியின் பெயரை வைத்துக் கொண்டு தில்லுமுல்லு பண்ணுகிறாயே, வெட்கமாயில்லை?'' என்று உறுமினார்.

என் பக்கம் திரும்பினார். "நெருக்கமான நண்பனாயிருந்தால் கூப்பிட்டு சோறு போடு. இப்படி உன் பேப்பரைக் காப்பியடிக்கத் தந்து, அவன் எதிர்காலத்தைப் பாழடிக்காதே" என்று என் விடைத் தாளை என் மேஜை மீது போட்டார்.

'ஐயோ, இல்லை... அவனைப் பார்த்து நானல்லவா காப்பியடித்தேன்' என்று தைரியமாகச் சொல்ல வார்த்தைகள் இன்றி, தொண்டையடைக்க நின்றேன். அரவிந்தனும் மறுத்துச் சொல்லாமல் கண்களில் கண்ணீர் தளும்ப அவரைப் பார்த்தான்.

"உன்னை பரீட்சையே எழுத விடாமல் செய்ய முடியும். ஆனால், உன் அப்பா அம்மாவிற்காக மன்னிக்கிறேன்'' என்று அரவிந்தனிடம் சொல்லிக் கொண்டே அவர், அவனுடைய விடைத்தாள்களைக் கிழித்தார்.

"உனக்குத் தெரிந்ததை மட்டும் எழுது. கிடைக்கும் மார்க் கிடைக்கட்டும்'' என்று அவனிடம் புதிதாக விடைத்தாள்களைக் கொடுத்தார். ''ஆனால், மணியடிக்கும் வரை தான் உனக்கு நேரம்"

மரத்தடியில் நகங்களைக் கடித்துக் கொண்டு, அரவிந்தனுக்காகக் காத்திருந்தேன்.

''அந்த கைதிக்கு ஜெயில்ல செம உபசரிப்பாம்...''

''ஓ...! அதான், நீதிபதி அவரிடம், 'ஜெயிலில் இருக்கும்போது உங்களை ஏதேனும் இன்புறுத்தினார்களா'ன்னு விசாரிக்கிறாரா?''

- சிரி. கிருஷ்ணரத்னம்

அவனைப் பார்த்ததும், 'ஸாரிடா' என்று சொல்வதற்குள் என் கண்களில் கண்ணீர்.

"முடிக்க முடிந்ததாடா?"

"இல்லை" என்று தலை அசைத்தான். "அறுபது மார்க் வரும். விடு"

முடிவுகள் வெளியானபோது, நான் தொண்ணூற்றியெட்டும், அவன் ஐம்பத்து நான்கும் வாங்கியிருந்தோம்.



அப்புறம் ஆறு மாதங்களுக்கு வேலைகளுக்கான விண்ணப்பங்கள்கூட இரண்டிரண்டாகத்தான் வாங்கினோம். தினமும் ஒரு முறையாவது சந்தித்து, தேரடி முனையில் ரகசியமாக சிகரெட் புகைத்தோம்.

திடீரென்று அவன் மாமாவின் கம்பெனியில் வேலை கிடைத்துவிட்டதாகக் கூறி பம்பாய்க்குப் புறப்பட்டுப் போனான். அடுத்த இரண்டு வருடங்களுக்கு புத்தாண்டு வாழ்த்துகளைப் பரிமாறிக் கொண்டோம்.

இடையில் நான் ஐ.பி.எஸ். தேர்வு எழுதித் தேர்வாகி, தமிழ்நாட்டிற்கே வந்தேன். அப்புறம் இருவருக்குமான தொடர்பு அறுந்து போய், அவனைக் கிட்டத்தட்ட மறந்து விட்ட நிலையில் இப்போது மீண்டும் அவனிடமிருந்து அழைப்பு!

ஏறத்தாழ கால் நூற்றாண்டுக்குப் பிறகு சந்திக்கப் போகிறேன்.

கார் திருவல்லிக்கேணி காவல் நிலையத்தின் வாசலில் நின்றது. காவலர்கள் மரியாதையுடன் சல்யூட்களை வழங்கினர். என் கவனம் அவர்களைத் தாண்டி உள்ளே பாய்ந்தது.

அரவிந்தனா இது?

டிப் டாப்பான சட்டை. மடிப்புக் கலையாத பாண்ட். பெல்ட்டில் செல்போன் உறை, கால்களில் ஷூக்கள் என்று கச்சிதமாக உடுத்தியிருந்தான். ஆனால், நிறைய மெலிந்திருந்தான். மீசையை மழித்து மழமழப்பாக சவரம் செய்திருந்தான்.

புருவங்கள் வெளித்தள்ளி கண்கள் உள் வாங்கியிருந்தன. என்னைப் பார்த்துப் புன்னகைத்து எழுந்தான். கண்கள் நிச்சயமின்றி அலைந்தன. கையை நீட்டி என் கையைப் பற்றிக் குலுக்கினான். அவன் விரல்களில் சின்ன நடுக்கமும், சற்றே நம்பிக்கையும் தெரிந்தன.

எனக்குள் எதுவோ அசைவதை உணர்ந்தேன்.

இன்ஸ்பெக்டர் தன் இருக்கையை எனக்கு விட்டுக் கொடுத்து, நின்றபடி பேசினார்.

"எழுநூறு கிராமுக்கு மேல சட்டைக்குள்ள ஒளிச்சு வச்சிருந்தாரு சார். காலேஜ் ஹாஸ்டலுக்குள்ள நுழையற சமயத்துல மடக்கிட்டோம். அங்கே ரெகுலரா இவர்தான் சப்ளை செய்யறார்னு பசங்க வாக்குமூலம் கொடுத்திருக்காங்க. ஸ்டேஷனுக்கு இழுத்திட்டு வந்து கேஸ் எழுதினப்புறம் தான் உங்க பேரைச் சொன்னாரு, சார்"

"நான் கொஞ்சம் தனியாப் பேசணும்" என்றேன்.

"அந்த ரூமுக்குப் போயிடலாம், சார்" என்று பக்கத்து விசாரணை அறையைக் காட்டினார்.

"ஸாரி, லோகு" என்றான், அரவிந்தன் எடுத்தவுடனே, "ரொம்ப பயமாயிருந்தது. அதனாலத்தான் உதவி கமிஷனரைத் தெரியும்னு உன் பேரைச் சொன்னேன்"

"இருபத்திநாலு வருஷம் கழிச்சு பார்க்கறோம்" என்றேன், தொப்பியை மேஜைமீது வைத்தபடி, அவனோடு சேர்ந்து ஒரு சிகரெட்டைப் புகைக்க வேண்டும் போலிருந்த தாகத்தை அடக்கினேன்.

"பேப்பர்ல உன் ஃபோட்டோவை அடிக்கடி பார்ப்பேன் லோகு. ஆனா

கணக்கு நீ தான் சுத்துத் தரியா?" என்றான்.

கணக்கைப் பற்றி அவன் பேசிய காரணம் புரிந்தது.

"நான் என்ன செய்யணும்னு எதிர் பார்க்கறே?"

"கேஸ் எதுவும் எழுதாம விட்டுறச் சொல்லு. சரக்கைத் திருப்பித் தர வேண்டாம். பல லட்சம் நஷ்டம்தான். அது எனக்குக் கொடுத்த தண்டனையா இருக்கட்டும்"

மேஜையில் இரு கைகளையும் ஊன்றி எழுந்தேன். அவனைக் கண்களுக்குள் பார்த்துப் பேசினேன்.

"அரவிந்த், நீ என் நண்பன்தான். நீ அன்னிக்கு உதவி செய்யலேன்னா, நான் டிகிரியை முடிக்காம, வேற எப்படியோ மாறிப் போயிருப்பேன். இப்ப போலீஸ் அதிகாரியா உன் முன்னால நின்னிருக்கக் கூட மாட்டேன். ஆனா, இப்ப ஒரு நியாயமான அதிகாரியா நான் நடந்துக்கலைன்னா, அன்னிக்கு எனக்காக நாப்பது மார்க்கை நீ தியாகம் பண்ணின அந்த நட்புக்கே அர்த்தமில்லாமப் போயிடும்"




அவன் மிரட்சியுடன் என்னைப் பார்த்தான்.

"இந்த பிஸினெஸ்ல யார், யார் உனக்குக் கூட்டாளின்னு சொல்லு. அப்ரூவரா மாறிடு"

உதடுகளை ஈரம் செய்து கொண்டான்.

"எனக்குப் பெரிய பெரிய வக்கீலையெல்லாம் பழக்கம். உன்னை வெளியே கொண்டு வர வேண்டியது என் பொறுப்பு. உன் குடும்பத்தை நான் பார்த்துக்கறேன்" என்று அவன் தோளை அழுத்திக் கொடுத்தேன்.

மௌனமாக நின்றான்.

வெளியே வந்ததும், இன்ஸ்பெக்டர் என் முகத்தைப் பார்த்தார்.

"அவன் என் நண்பன். வாக்குமூலம் வாங்கறப்ப ரொம்ப அடிக்காதீங்க..."

"யெஸ், சார்"

"அவன் எப்ப என்கிட்ட பேசணும்னு சொன்னாலும், என்னைக் கூப்புடுங்க"

"லோகு!" அரவிந்தின் குரல் என்னைத் திரும்பிப் பார்க்க வைத்தது.

"இதை மறந்துட்டியே?" என்று என் தொப்பியை எடுத்து நீட்டினான். ○

கூப்பிட்டுப் பேச தைரியமில்லே"

"பம்பாய்க்கில்ல போனே?" என்றேன்.

"மாமா செத்ததும், அவர் கம்பெனியும் செத்துப் போச்சு. அப்புறம் வாழ்க்கைல போராடித் தோத்துட்டேன். அதான்."

"எல்லாரும் சொல்ற காரணம்தான். படிக்கற பசங்களை போதைப்பழக்கத்துக்கு அடிமையாக்கலாமா, அரவிந்த்?"

கண்களைத் தழைத்துக் கொண்டான்.

"தப்பு தான். ஆனா, நான் சப்ளை செய்யலேன்னா, திருந்திடப் போறாங்களா? வேற ஒருத்தனைத் தேடிப் போவாங்க."

"லோ, இதைத் தொடர்ந்து செய்வே?"

"இல்லே... இந்தத் தடவை மன்னிச்சு விட்டுரு. இனிமே வேற பொழப்பைப் பார்த்துக்கறேன்"

அவன் முகத்தைப் பார்க்காமல் என் உள்ளங்கை ரேகைகளை சற்று நேரம் ஆராய்ந்து கொண்டிருந்தேன்.

"லோகு, இப்ப உன் பசங்களுக்கு

# ஜோதிகாவின் புலம்பல்!

'ஆனாலும் ஆண்டவனுக்கு இந்த பாரபட்சம் வேண்டாம். நானும் ரம்பாவும் ஒரே வயது, படிப்பு, அழகு, வசதிகள் எல்லாமே ஒரே மாதிரிதான். இருவர் கணவர்களும் இரு சீனியர்கள். கை நிறையக் காசு. ஆனாலும் எனக்கு இருக்கும் இந்த டென்ஷன் யாருக்கும் இல்லை. குறிப்பாக ரம்பாவுக்கு இல்லவே இல்லை.

அப்பப்பா! இந்த டென்ஷனால் இரவில் தூக்கம் வருவதில்லை. தினமும் கிடைக்குமா? போதுமா? என்று ஒரே டென்ஷன். இந்த டென்ஷனுக்கு செலவு வேறு அதிகரித்துக் கொண்டே போகிறது. மாதம் ஐந்நூறு, ஆயிரம்னு இருக்கும். இப்போ ஆயிரத்து ஐந்நூறு ஆகுது.

ஆனால் ரம்பாவோ, ஜாலியாக ஆறரை மணிக்குத்தான் எழுவாள். மெதுவாக காபியை கையில் எடுத்தவாறு தோட்டத்தில் உலா. பணச் செலவும் இல்லை. போதாததற்கு ஒரு நாளைக்கு இருமுறை குளியல். என்ன அதிர்ஷ்டம் பாருங்கள்!"



வீவில் தோழி ரம்பாவின் புகுந்த வீடான நெய்வேலிக்குச் சென்று அங்கு தண்ணீர் அருவி போல் கொட்டுவதைப் பார்த்து, சென்னை தண்ணீர்க் கஷ்டத்தில் தினம் தினம் டென்ஷனாகும் ஜோதிகாவின் புலம்பல் இது!

- அனுராதா சுந்தரம்

## சுனாமி குத்து!

சுனாமியால் பாதிக்கப்பட்ட மக்களைக் கண்டு ஆறுதல் சொல்ல, கேரள சட்டமன்ற எதிர்கட்சித் தலைவரும் இடது கம்யூனிஸ்ட் கட்சித் தலைவருமான வி.எஸ். அச்சுதானந்தன் புல்குளங்கரை நிவாரண கேம்புக்கு வந்திருந்தார். அங்கு உறவுகளையும் உடைமைகளையும் இழந்திருந்த பொதுமக்கள் "ஐயா! எங்களுக்கு உதவி செய்யுங்கய்யா" என அழுது புலம்ப, அச்சுதானந்தன் "நான் என்ன மந்திரியா? உங்களுக்கு உதவ" என திரும்பக் கேட்டிருக்கிறார். இதனை கொஞ்சமும் எதிர்பாராத பொதுமக்கள் கூட ஸ்தம்பித்துப் போனார்கள். தொடர்ந்து அச்சுதானந்தன் "நீங்க காங்கிரசுக்குதானே வோட்டு குத்துவீங்க;



# பிரபுதேவாவின் ஏக்கம்!

"டேய் பார்த்தி... இதோ பார்... 'நிலா' பத்திரிகையில் என் சிறு கதை வெளியாகியிருக்குடா!" உயிர் நண்பனிடம் ஆசையாகக் காட்டினான் பிரபு தேவா.

இதழை வாங்கி, கதைளை வாசித்து விட்டு "சுமாரா இருக்குடா. இது நண்பர்கள் நடத்தும் தனிச்சுற்று இதழ் போலிருக்கு. அதான் உன் கதை சுலபமா வந்துடுச்சுடா..." என்றான் அசிரத்தையாக.

ஒரு வாரத்துக்குப் பிறகு.

"தோழா... 'அமுதம்' இதழில் என் படைப்பு வந்திருக்கு. படிச்சுப் பார்..." ஆனந்தம் பொங்க, புத்தகத்தை நீட்டினான்.

சில நிமிடங்களை ஒதுக்கி படித்த பார்த்தி... "கதை பரவாயில்லை... 'அமுதம்' சர்க்குலேஷன் குறைவான இதழ்..." உதட்டைச் சுழித்தவாறு நோக்கினான்.

இரண்டு மாதங்கள் உருண்டோடின.

"பார்த்தி... 'காமதேனு' வார இதழ் நடத்திய சிறுகதைப் போட்டியில் என் கதைக்கு ஐயாயிரம் ரூபாய் முதல் பரிசு கிடைச்சிருக்கு" சந்தோஷமாகக் குதித்தான் பிரபுதேவா.

"கங்கிராட்ஸ்டா தேவா. இதைத் தான் எதிர்பார்த்தேன். ஆரம்பத்திலேயே உன்னை ஆகா ஓகோனு பாராட்டியிருந்தா நீ தொடர்ந்து எழுதியிருக்க மாட்டே... உன் மனகல இப்போ ஒரு உந்துதல் கிளம்பி, பெரிசா சாதிச்சுக் காட்டிட்டேடா... வெரிகுட்! தொடர்ந்து எழுதி வெற்றி வாகை சூடு!" கரம் குலுக்கினான் பார்த்தி.

- மாலா உத்தண்டராமன்



போய் குத்துங்க" என்று கூறி இருக்கிறார். கம்யூனிஸ்ட் ஆதரவு பொதுமக்கள் கூட அவர் மீது பாயத் துயாரானார்கள். இதனைக் கண்ட கட்சித் தொண்டர்கள் படாதபாடு பட்டு அச்சுதானந்தனை பொதுமக்களிடமிருந்து காப்பாற்றி அழைத்துச் சென்றார்கள்.

- எஸ்.எஸ். மணி

# விழாவுக்கு வந்த பெரியவர்!

**ஏவி.எம்.சரவணன்**

'சென்னையில் உயரத்தில் எந்த விளம்பரம் செய்வதாக இருந்தாலும், விமான நிலைய நிர்வாகத்திடமிருந்து முன் அனுமதி பெற வேண்டும்' என்ற விதிமுறை இருப்பது அப்போது எங்களுக்கு உண்மையிலேயே தெரியாது. அதேபோல ஹைட்ரஜன் சிலிண்டரின் உதவியால் பறக்கும் அந்தப் பலூனுக்காக சிலிண்டர் வைக்கவும் முன் அனுமதி பெற்றிருக்க வேண்டும். நாங்கள் இரண்டையும் செய்யவில்லை.

விமான நிலைய அதிகாரிகளிடமிருந்தும், 'இன்ஸ்பெக்டர் ஆஃப் எக்ஸ்ப்ளோஸிவ்ஸ்' அலுவலகத்திலிருந்தும் தனித் தனியாக எங்களுக்கு நோட்டீஸ்கள் வந்தன. அது எங்களுக்குப் புது அனுபவம். நிலைமையை எப்படிக் கையாள்வது என்று அப்பச்சி படிப்படியாக அறிவுரை தந்தார். அதன்படி நடவடிக்கை எடுத்து, பிரச்னையைப் பதற்றமின்றித் தீர்த்தோம்.




'பாவமன்னிப்பு' வெளியாகி சக்கைப் போடு போட்டுக் கொண்டிருந்தபோது, பாடல்களுக்கு இருந்த வரவேற்பையே ஒரு விளம்பர யுக்தியாக்கி அப்பச்சி ஓர் ஐடியா தந்தார். அதன்படி 'பாவ மன்னிப்பு பாடல்கள் போட்டி' அறிவித்தோம்.

படத்தின் பாடல்களை நேயர்கள் தங்கள் ரசனைப்படி வரிசைப்படுத்தி எழுத வேண்டும். நீதிபதிகள் வரிசைப் படுத்தியிருப்பதற்கு எது ஒத்திருக்கிறதோ, அதற்குப் பரிசு. பெருமளவில் ரசிகர்கள் கலந்து கொண்டார்கள். பெரிய நோட்டுப் புத்தகங்கள், லெட்ஜர்களிலெல்லாம் பல்வேறு காம்பினேஷன்களில் பாடல்களை வரிசைப்படுத்தி அவர்கள் எழுதியனுப்பியவை, ஓர் அறை முழுவதும் குவிந்துபோனது. யாரும், எவ்வளவு வேண்டுமானால் எழுதலாம் என்று விளம்பரப் படுத்தியிருந்தோம் பிரமாதமாக. கவிதாயினி சௌந்தரா கைலாசம் உள்ளிட்ட பெருமக்கள் நீதிபதியாக இருந்தார்கள்.

ஸ்டூடியோ வளாகத்தில் திறந்த வெளியில் ஒரு கரும்பலகையில் 'தீர்மானிக்கப்பட்ட பாடல் வரிசை'யை சாக்பீஸில் எழுதிப் போட்டு, எங்கள் ஊழியர்களிடம் நேயர்களின் கடிதங்களைப் பிரித்துத் தந்து மார்க் போடச் சொன்னோம். ஏதோ பெரிய தேர்வு ஒன்றில் கலந்து கொள்வது போல, எங்கள் ஊழியர்கள் அமர்ந்து அப்பணியில் ஈடுபட்டார்கள்.

ஒரு திரைப்படத்தின் பாடல்களையும், ரசிகர்களையும் சம்பந்தப்படுத்தி ஒரு போட்டி நடத்தப்பட்டது, அதுதான் தமிழில் முதல் தடவை என்று அனைவரும் பாராட்டினார்கள்.

இதில் வேடிக்கை என்னவென்றால், பல்லாயிரம் பேர் பங்கு கொண்ட அந்தப் போட்டியில் வெற்றி பெற்றவர்கள், பரிசுத் தொகையான பத்தாயிரம் ரூபாயைப் பகிர்ந்து கொண்டபோது, தபாலுக்குச்

# திரையுலக நினைவுகள்

செலவு செய்த தொகைகூட அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இருந்தாலும் அவர்களுக்கு ஒரு 'த்ரில்' இருந்தது.

என் தந்தைக்கு ரிஷிகேஷ் முகர்ஜி மீது மிகப் பெரிய ஈடுபாடு எப்போதுமே உண்டு. அவர் இயக்கத்தில் ஏவி.எம். பேனரில் ஒரு படம் எடுக்க வேண்டும் என்பது அப்பச்சியின் ஆசை.

இது பற்றிப் பேசியபோது ரிஷிகேஷ் முக்கியமாக ஒரு வேண்டுகோள் விடுத்தார்.

"உங்க ஸ்டைல் வேற. என் ஸ்டைல் வேற. நான் உங்களுக்குப் படம் பண்ணத் தயாரா இருக்கேன். ஆனா எதிலேயும் உங்க தலையீடு இருக்கக்கூடாது. எனக்கு முழு சுதந்தரம் வேணும். இதுக்குச் சரின்னா நானும் சரி."

அப்பச்சி உடனே 'சரி' என்றார்.

அதன்படியே எங்கள் தலையீடோ, குறுக்கீடோ கொஞ்சமும் இன்றி முழு சுதந்திரத்துடன் ரிஷிகேஷ் செயல்பட்டார். கலைஞர்கள், தொழில் நுட்ப நிபுணர்கள் அனைவரையும் தம் விருப்பப்படி அவரே தேர்ந்தெடுத்தார். சுனில்தத் கதாநாயகனாகவும், ஆஷா பரேக் கதாநாயகியாகவும் நடித்தார்கள். சலீல் சௌத்ரி இசையமைத்தார். திட்டமிட்டபடி படப்பிடிப்பை நடத்தி, ரெயில்வே ட்ராக் செட் போட்டு, கிளைமாக்ஸ் காட்சியைச் சிறப்பாக எடுத்துப் படத்தை முடித்தார். எல்லாக் கலைஞர்களும் அவரவர் ஊர்களுக்குக் கிளம்பி விட்டார்கள். பின்னர்



* 'சாயா' - படத்தில் ஆஷா பரேக், சுனில்தத்



* 'பாவமன்னிப்பு' - பாட்டுப் போட்டி

லேபரட்டரியில் அந்தப் படச்சுருளை பிராஸஸ் செய்தபோது மின்தடை ஏற்பட்டு, சில தொழில் நுட்பக் கோளாறுகளால் அந்த கிளைமாக்ஸ் படச் சுருள் பழுதாகி விட்டது. கிளைமாக்ஸை மீண்டும் எடுத்தாக வேண்டும். அக் காட்சியில் கலந்து கொண்ட அனைத்துக் கலைஞர்களையும் மீண்டும் ஒன்று சேர்க்க இரண்டு மாதங்களுக்கு மேல் ஆயிற்று. மறுபடியும் கிளைமாக்ஸை ரிஷிகேஷ் படமாக்கினார்.

அந்தப் படத்தின் பெயர் 'சாயா!' சாயா என்றால் நிழல் என்று பொருள்.

ஆனால் படம் சரியாக ஓடவில்லை. தோல்விப்படமாகவே அமைந்தது.

எனினும் அந்தப் படத்திலிருந்து சுனில்தத் என்ற அருமையான கலைஞருக்கும், எங்கள் ஏவி.எம் நிறுவனத்துக்கும் ஓர் இனிய உறவு உறுதியானது.

'சாயா' படம் தோல்வியடைந்த போதும், 'பரவாயில்லை... இன்னொரு படம் எடுத்தால் போயிற்று' என்ற சிந்தனையில் நாங்கள் ரிஷிகேஷ் முகர்ஜியிடம் பேசினோம்.

"வேண்டாம். நான் கேட்ட அவ்வளவு உரிமையையும் நீங்கள் எனக்குத் தந்தீர்கள். என் பணியில் உங்கள் குறுக்கீடு கொஞ்சமும் இல்லை. அப்படியிருந்தும் உங்களுக்காக நான் இயக்கிய படம் ஓடவில்லை. உங்கள் பெருந்தன்மைக்கு நன்றி. இன்னொரு படம் வேண்டாம். ஸாரி. நாம் என்றைக்கும் நல்ல நண்பர்களாக இருப்பதையே விரும்புகிறேன்'' என்றார் ரிஷிகேஷ்.

பெருந்தன்மை என்ற வார்த்தை உண்மையில் அவருக்குத்தான் பொருந்தும்.

சில வருடங்கள் கழித்து நாங்கள் தயாரித்த 'முரட்டுக்காளை' படத்தின் நூறாவது நாள் விழாவுக்கு நான் அழைத்திருந்தேன். அப்போது மத்திய தணிக்கைக் குழுவின் தலைவர் பொறுப்பில் ரிஷிகேஷ் இருந்தார். நான் அவரை விழாவுக்கு அழைத்திருந்தேனே தவிர, அவரது பணிகளின் அழுத்தமும், அவருக்கு நேரமிருக்காது என்பதும் எனக்குத் தெரியும்.

விழா மேடையில் நான் அமர்ந்திருந்த போது முதியவர் ஒருவர் வராந்தாவில் மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்ததைப் பார்த்தேன்.

ரிஷிகேஷ் முகர்ஜி!

நான் சிலிர்த்துப் போனேன். மேடையிலிருந்து இறங்கி வேகமாகச் சென்று, அவரை வரவேற்று அழைத்து வந்தேன்.

''உங்களுக்காகத்தான் வந்தேன், சரவணன். எனக்கு இந்தக் கூட்டத்தில் வேறு யாரையும் தெரியாது. விழா வெற்றிகரமாக நடைபெற என் வாழ்த்துகள். ஏவி.எம். நிறுவனம் மேன்மேலும் வளர்ந்தோங்க என் ஆசிகள்'' என்று என் தலையின்மீது கைவைத்து ஆசீர்வதித்து விட்டுக் கிளம்பி விட்டார் அந்தப் பெருமகன்.

வாழ்க்கையில் என்னால் மறக்க முடியாத சம்பவங்களில் அதுவும் ஒன்று.

(தொடரும்

# சின்னான் செய்திகள்

இதனால் சகல சின்னான் ரசிகக் கண்மணிகளுக்கும் தெரிவித்துக் கொள்வது என்னவென்றால், இந்தப் பக்கத்துல கடைசி நாலு வரியில நான் என் கேர்ள் ஃப்ரெண்ட் பத்தி அறிவிக்கப் போகிறேன். (ஸாரி... பத்திரிகையுலக நண்பர்களே! தவிர்க்க முடியாத காரணத்தினால் 'பிரஸ் மீட்' வைக்க முடியல!)

சுமிக்கு என்ன ப்ராப்ளம்னு தெரியல. நான் 'வம்புக்கு' சுமியைச் சொல்லல! இது பழனிகோயில் யானை சுமதி! கேம்ப் முடிஞ்சு லாரியில ஏறமாட்டேன்னு சொல்லிடுச்சு. அப்புறம் ஒரு வழியா அவிநாசி வரை வந்திடுச்சு! அதுக்கப்புறம் முரண்டு பிடிச்சதால, அங்கயிருந்து பழநிக்கு (106 கி.மீ.) ஆமை வேகத்துல நடக்க ஆரம்பிச்சிருக்காம். டியர் சுமதி! ஏதும் அரசியல் ஆசை இருக்கா! வை.கோ. மாதிரியே நடைப் பயணம் ஆரம்பிச்சிருக்கியே, அதான் கேட்டேன்.

தேவனாம்பட்டிணம் 'தேவனா' விவேக் ஓபராய் அங்கேயே வாழ்ந்துக்கிட்டிருக்காரு. பலருக்கு வாழ்வும் கொடுத்துக்கிட்டிருக்காரு. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமா புல்லரிக்க வைக்கிறாரு! ஆனா இங்க ஸ்க்ரீன்ல 'மகானா' ஸீனு காட்டுற நம்ம கதாநாயகர்கள், சங்கத் தேர்தல்ல செம பிஸி! என்னத்தச் சொல்ல! 'பணக்காரனா' இருக்கறது சாதாரணம்! நல்ல மனக்காரனா வாழ்றதே உதாரணம்! இதான் இந்த வார சின்னான் பஞ்ச் டயலாக்!



தாராபுரம் பகுதி விவசாய மக்களே! காலி பிளவர் பூவெல்லாம் உஜாலாவுக்கு மாற (அதாங்க வெண்மையாக) 'உஜ்லாலா'ங்கிற மருந்தை தண்ணீரில கலந்து தெளிங்க. பொங்கல் டைம்ல சின்னானோட விவசாய நியூஸ்.

ஆனா 'பிராந்தி' தெளிச்சா பூ வெண்மையாகும்னு எவனோ புரளியைக் கிளப்பிவிட்டிருக்கான். விட்டா, 'விளக்கெண்ணெய்' தெளிச்சா வெண்டைக்காய் விரசா விளையும், மண்ணெண்ணெய் தெளிச்சா மாங்காய் சிவப்பா பழுக்கும்'னு கிளப்புவானுங்க. நம்பாதீங்க சாமியோவ்!

முப்பத்தஞ்சாவது டெஸ்ட்ல முதல் வெற்றியை முத்தமிட்ட நம்ம வங்க தேசத்துக்கு சின்னானோட 'சின்ன' சாங்கை கிஃப்ட் பண்றேன். 'ஏ சிங்கம் போல நடந்து வரான் வங்க தேசம்டி! எதிர்த்து நின்ன, ஜிம்பாப்வே மிரண்டு போனாண்டி! ஏ! கிரவுண்ட் சிட்டகாங்கு! அங்கு வங்கம் எடுத்துடுச்ச நொங்கு!"

ஓ.கே. ஓ.கே. என் கேர்ள் ஃப்ரெண்ட் ரகசியம் இதோ! சின்னானுக்கு கேர்ள் ஃப்ரெண்டாக இருக்கத் தகுதியுடைய இளம் பெண்களிடமிருந்து விண்ணப்பங்கள் 'கொத்துக் கொத்தாக' வரவேற்கப்படுகின்றன. (மாயாவதி, உமாபாரதி, ஜெயலட்சுமி, சொர்ணாக்கா வகையறாக்கள் விண்ணப்பிக்க வேண்டாமுங்கோ!)

"அதோ போறாரே, ஹோம் மினிஸ்டர், அவர் என்னோட கல்லூரி நண்பர்தான்- ஏன், நம்ம சென்னை கலெக்டர்கூட என் பள்ளி நண்பர்தான்" - என பெருமையடித்துக் கொள்பவர்களுக்கு மத்தியில், வாயில்லா ஜீவன்களையும் தம்முடைய நண்பர்கள் என்று பெருமை பொங்கக் கூறுபவர்களும் இருக்கவே செய்கின்றனர்.

# செல்லக் குட்டி...

டாக்டர் செரியன்:

மற்ற செல்லப் பிராணிகளை வளர்ப்பது போல மயில்களை வளர்க்க முடியாது. அதுக்கு சிறப்பு அனுமதி வாங்கணும். என்கிட்ட மூணு ஜோடி மயில்கள் இருக்கின்றன. தினமும் இரண்டு தடவையாவது





பார்க்கலைன்னா, எனக்கே ஏக்கமா போயிடும். நான் பார்த்தாலோ, இல்ல அதுங்க என்னைப் பார்த்தாலோ, உடனே என்கிட்ட ஓடி வந்துடும். அந்த அளவுக்கு நட்பு" சொல்லிவிட்டுச் சிரிக்கிறார் டாக்டர் செரியன்.

இந்த நிஜ நாட்டியப் பேரொளிகளின் சாப்பாட்டு மெனு என்னவாக இருக்கும்...?

காலையில ராகி இட்லி, நெய் மைசூர் பாகு. மதியம் அரிசி சாதம், காய்கறிகள்... அப்பப்போ சிக்கன் சிடை நொறுக்ஸ். குடிக்க வெல்லம் போட்ட வெள்ளம்.

ஹ¬ம்... பெருமூச்சு விட்டபடியே நாம் வெளியே வர, அருகில் வந்த மயிலை வருடுவதில்

பிஸியாகி விட்ட டாக்டர் செரியன், மயிலுடன் சேர்ந்து போஸ் கொடுக்க மறுத்துவிட்டார் (நட்பு செண்டிமெண்ட்!)

கராத்தே ஹுசைனி

# புஜ்ஜு குட்டி!

**க**ராத்தே கில்லாடி ஹுசைனி வீட்டில் ஏகப்பட்ட நாய்கள் மிரட்டிக் கொண்டிருக்கும் என்ற விஷயம் காதில் விழ, அவரிடமே கேட்டோம்:

"என்கிட்டே இப்போ கிட்டத்தட்ட பன்னிரண்டு வகை நாய்கள் உள்ளன. எல்லாருக்கும் நாய் ஒரு தோழன்னு சொல்வாங்க. ஆனா என் விஷயத்துல, நாய் உயிர் காத்த தோழன்னே சொல்லாம். ஒரு தடவை ஊருக்குப் போயிட்டு வந்து ரொம்ப களைப்பா இருந்துச்சு. கட்டில்ல படுத்து நல்லா அசந்து தூங்கிட்டேன். திடீர்னு ரூம்ல இருந்த ஏசி ஷார்ட் சர்க்யூட் ஆகி தீப்பிடிச்சுருக்கு போல. அது எனக்குத் தெரியாம தூங்கிட்டே இருந்திருக்கேன். உடனே அந்த ரூம்ல படுத்திருந்த என் நாய் அகிடோ விஷயத்தைப் புரிஞ்சிகிட்டு, என்னைப் பிறாண்டி எழுப்பி, என் உயிரைக் காப்பாத்திச்சு. என் செல்லம்" என்று முத்தமிட்டவரிடம் "இவற்றை வளர்க்க என்ன பட்ஜெட் ஆகுது?" என்றோம்.

"பால், முட்டை, பிஸ்கட், அரிசி, கறின்னு வாங்கிப் போட, மாசத்துக்கு இருபதாயிரம் வரைக்கும் செலவாகுது" என்கிறார் அலட்சியமாக!

- முத்து





# குஷி மூடில் மாஜி ரத்தங்கள்!

● பிரபல பத்திரிகையாளரின் மேலவைப் பதவிக் காலம் விரைவில் முடிவடைய உள்ளதால், அந்தப் பதவிக்கு தம்மை முன்னிறுத்துமாறு செம்மொழித் தலைவரைத் தொடர்ந்து வலியுறுத்தி வருகிறாராம் செம்மொழிக் கவிஞர். இது கழகத்தினர் மத்தியில் பெரும் சலசலப்பை ஏற்படுத்தியுள்ளதாம். கட்சிக்குத் தொடர்பில்லாதவர் போல காட்டிக் கொண்டு, தங்கள் தலைவரை வைத்து காரியம் சாதித்துக் கொள்பவராக அந்தக் 'காஸ்ட்லி' கவிஞர் இருப்பதுதான் கழகத்தினரின் கோபத்துக்குக் காரணமாம்.





● தற்போது தமிழகக் காங்கிரசில் ப. சிதம்பரத்துக்கு ஆதரவாக ஒரு சூழ்நிலை உருவாகி வருகிறதாம். குறிப்பாக சிதம்பரம் கலந்து கொள்ளும் கூட்டங்களில் காங்கிரஸார் கோஷ்டி வித்தியாசமின்றி கலந்து கொண்டு ஆதரவளிப்பது "நாம் சரியான திசையை நோக்கித்தான் பயணிக்கிறோம்" என்ற நம்பிக்கையைச் சிதம்பரத்துக்கு ஏற்படுத்தியுள்ளதாக அவரது ஆதரவாளர்கள் பெருமை பொங்கப் பேசுகிறார்களாம்.

● சமீபத்தில் மு.க. ஸ்டாலின் தமிழக முதல்வரை நேரில் சந்தித்து சுனாமி நிவாரண நிதியை அளித்தது, அரசியல் வட்டாரத்தில் பல்வேறு யூகங்களைக் கிளப்பியுள்ளது. அண்ணாநகர் ரமேஷ் வழக்கில் ஸ்டாலின் பெயரைத் தொடர்புபடுத்தி, வெளி வரும் மீடியா செய்திகளின் அடிப்படையில், 'ஜெ'வை கூல் டவுன் செய்வதற்காகத்தான் ஸ்டாலின் நேரில் சென்றதாகக் கூடச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்! அது அவ்வளவு சுலபமல்ல என்பது சம்பந்தப்பட்ட/சம்பந்தப்படாத அனைவருக்கும் தெரிந்திருக்க வேண்டாமோ?

● சுனாமியோடு சுனாமியாக ஆலடி அருணா, அ.தி.மு.க எம்.எல்.ஏ சுதர்சனம் ஆகியோர் படுகொலைகள் மறைந்து போவதை எதிர்கட்சிகள் விரும்பவில்லையாம். நிவாரணப் பணிகள் ஓரளவுக்கு முடிவடைந்த பின்னர், இந்த விவகாரத்தை எப்படி மக்கள் முன் கொண்டு செல்வது என்பது குறித்து ஆராய உள்ளனராம். அதேசமயம் அனைத்துக் கட்சிக் கூட்டத்துக்கு அழைக்கப்படாததால் மனம் வெதும்பி இருக்கும் சில உதிரிகள், இந்த விஷயத்தில் ஓரணியில் திரள முடிவு செய்துள்ளார்களாம்.

● தமது சாதனைகளை மக்களிடம் கூட்டம் போட்டுச் சொல்வதற்குத் தற்போது அ.தி.மு.கவில் முன்னாள் அமைச்சர்களுக்குத்தான் அதிக கிராக்கியாம். குறிப்பாக, எம்.ஜி.ஆர் காலத்து ரத்தங்கள்தான் 'ஜெ'வின் டார்கெட்டாம். விஷயத்தைக் கேள்விப்பட்ட மாஜி ரத்தங்கள் தற்போது குஷி மூடில் மேடைப்பேச்சுக்குத் தயாராகி வருகின்றனராம்.

- கலை

உண்மையான, நிரந்தரமான, நட்புக்கு அடையாளம், நடிகர் விவேக்தான். நிகழ்ச்சி இருக்கிற நாளில் எல்லாம் காலையிலேயே ஒரு எஸ்.எம்.எஸ் அனுப்பி வாழ்த்துச் சொல்லி விடுவார் விவேக், இசை நிகழ்ச்சிக்கு வந்தால், முன் வரிசையில் உட்கார்ந்து கொண்டு முழு மனத்தோடு ரசிப்பார். பொதுவாக சங்கீதத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்தாலும், 'இது என்ன ராகம்?' என்று குறிப்பாகக் கேள்வி கேட்டுப் புரிந்து கொள்வார். முடிவில் ''என்னுடைய மாலை நேரத்தை இனிமையாகச் செலவிட உதவினீர்கள்'' என்று ஆத்மார்த்தமாகச் சொல்வார். இசையை மட்டுமல்ல, ஆர்ட்டிஸ்ட் என்றால் அவருடைய 'டெம்பரமென்ட்'டையும் நன்றாகப் புரிந்துகொண்டு பழகுவார் விவேக். திரைப்பட நடிகர், புகழ் பெற்ற காமெடியன் என்று மட்டுமே முதலில் விவேக்கைப் பற்றி நான் நினைத்திருந்தேன். என்னுடைய எண்ணத்தை அப்படியே மாற்றிவிட்டார் விவேக். டௌன்-டு-எர்த் என்பார்களே, அப்படி ஓர் இயல்பான, எளிமையான நட்பு.




● ஓ.எல். அருண்

# மாம் ஃப்ரம் இண்டியா

MOM FROM INDIA

அனுராதா ரமணன்

**உ**லக வரைபடத்தில் இடது கைப் பக்கம், மேலே 'யுனைடட் ஸ்டேட்ஸ்' என்று எழுதியிருக்கும் பாருங்கள்... அதில் பூதக் கண்ணாடியை வைத்துக்கொண்டு, இடுப்பை 45 டிகிரி வளைத்து, கொஞ்சம் அவஸ்தையுடன் தேடினால் - சாப்பாட்டுப் பந்தியில், பரிசாரகர் அவசரமாய் மோர்குழம்பு பரிமாறியதில் கைதவறிச் சிந்தியது போல துணுக்குப் பிரமாணம் இருக்கும் பாருங்கள்...



அதுதான்... அதுவேதான்... மினியா போலீஸ், சிகாகோ, க்ளிவ்லேண்ட், பாஸ்டன், ஹுஸ்டன்... இப்படிப் பார்வையை நகர்த்திக் கொண்டே வந்தால்... டெக்ஸாஸ் என்று ஒரு மாகாணம்... அதிலே 'டலாஸ்' என்றொரு நகரம்... கண்டுபிடித்து விட்டீர்களா...?

அதேதான்!

ப்ரியம்வதாவுக்கு இது ஏழு மாசம்... வயிறு அதிகம் தெரியாதபடி தொள தொளப்பான ஷர்ட், பாண்ட் சகிதம், கணவன் கிஷோருக்குப் பக்கத்தில் 'உம்'மென்று உட்கார்ந்திருந்தாள்.

மனைவியை ஓரக் கண்ணால் பார்த்தபடியே காரை ஓட்டிக் கொண்டிருந்தான் கிஷோர்.

அமெரிக்காவில் கார் ஓட்டுவது ஒன்றும் பிரும்ம வித்தையே இல்லை. எல்லாவற்றுக்கும் சுவிட்ச் இருக்கும். அததை - அவ்வப்பொழுது தட்டி விட்டு, ஸ்டீயரிங் முன் அமர்ந்தபடி சரசரவென வழுக்கிக் கொண்டு, ஓடும் அகலமான சாலையை வேடிக்கை பார்க்கலாம். சோம்பல் முறிக்கலாம். 'கோக்' குடிக்கலாம்... முடிந்தால் - மனைவியும் 'ரொமான்டிக் மூடி'ல் இருந்தால் - கொஞ்சம் சிரமப்பட்டு முத்தம் கொடுக்கலாம்.

சிரமத்துக்குக் காரணம் ஓட்டுபவர், பயணிப்பவர் அனைவரும் பாதுகாப்பு பெல்ட்டை அணிந்திருக்க வேண்டும்...

இரண்டாவது சிரமம், போலீஸ் கண்ணில் ஏடாகூடமாகச் சிக்காமல் இருக்க வேண்டும்.

நிறுத்தி வைத்து 'டிக்கட்' கொடுத்தால் - அபராதம் நம்ம ஊர் தொகையில் ஐம்பதாயிரம் பக்கம் பழுத்துவிடும்.

அமெரிக்க டாலரை - இந்திய ரூபாயாக மாற்றிக் கணக்குப் போடவே கூடாது. போட்டால் மாரடைப்பு வந்து விடும்.

ஆனாலும், இத்தனை இடர்ப்பாடுகளுக்கு நடுவிலும் மனைவியின் வீங்கிய முகத்துக்குக் காரணம் தெரியாமல் தவித்துப் போனான் கிஷோர்.

'சட்'டென சி.டி. ப்ளேயரைத் தட்டி விட்டான். அத் தனைக் குளிரிலும் எம்.பி. ராமநாதனின் கனத்த குரல்... ரூம் ஹீட்டரின் பக்கத்தில் உட்கார்ந்திருப்பது போல் 'கும்' என்றிருந்தது.

2

'பட்'டெனப் பாட்டை நிறுத்தினாள் ப்ரியா. பாதையி விருந்து கண்களை எடுக்காமலேயே, அவளது ஒவ்வொரு அசைவையும் கவனித்தான் கிஷோர்.

திருமணமாகி, இத்தனை வருட தாம்பத்யத்தில் மனை விக்கு அருள் ஏறி சாமி வந்தால் - எப்படிச் சமாளிப்பது என்பதில் டாக்டரேட் வாங்காத குறைதான்...



**ஸ்ரீ** சாய்பாபாதான் என்னோட பெஸ்ட் ஃப்ரெண்ட். அவர்கூட எனக்கு நிறைய சென்டிமெண்ட்ஸ் உண்டு. இப்ப நான் ஏதாவது பண்ணணும்னு நினைச்சேன்னா, அடுத்த அஞ்சு நிமிஷத்துக்குள்ள அவர் புகைப்படமோ அல்லது அவரோட வாசகங்களோ என் கண்ணுல படும். பட்டுச்சுன்னா, கிரீன் சிக்னல் கிடைச்சுட்டுதா அர்த்தம். இல்லைன்னா, அந்தக் காரியத்தை கொஞ்சம் தள்ளிப் போட்டுடுவேன்.



# நட்பு

• விஜயசாரதி

அவளை சகஜமாக்க, இவன் கையாளும் ஒரு சில உபாயங்கள்...

ப்ரியாவுக்கு சங்கீதம் என்றால் - அதுவும் எம்.பி. ராமநாதன் என்றால் உயிர்...

இந்த வீக்னெஸ், கிஷோருக்கு அவ்வப்போது கை கொடுக்கும்.

"எம்.பி. ராமநாதன் வாய்ஸ் அச்சு அப்படியே உங்கப்பா குரல் மாதிரி இருக்கு... இல்லே?"

ப்ரியா 'அப்பா' என்றால் அந்தக் குளிரிலும் ஐஸ்க்ரீமாக உருகுவாள்...

"ஆமா... இது என்ன ராகம்... நேத்து அந்த கணபதி சுப்ரமண்யம் வீட்டு பஜன்லே நீ பாடினியே... அதுவும், இதுவும் ஒரே ராகமா..."

இந்தக் கேள்வி மூலமாக, மனைவியின் சங்கீதத்தில் அவன் எந்த அளவுக்கு ஒன்றிப் போயிருக்கிறான் என்பதை சாமர்த்தியமாய்க் கோடி காட்டுவான்.

"இன்னிக்கு நீ செஞ்சிருந்த சாம்பார் 'ஏ' கிளாஸ்.. ஸவுத் இன்டியன்ஸ்ஸோட ரெசிபீஸ்ஸே தனி டேஸ்ட்பா... எங்க ஸைடுலே எல்லாம் சப்பாத்தி, புல்கா, ரொட்டி, நான்,நீ... இதெல்லாம்தான்... ஸைட் டிஷ்னா ஒரே மசாலாவா இருக்கும். இல்லே - பச்சை முள்ளங்கியக் கடிச்சுக்கணும்... உன் கைச் சாப்பாட்டைச் சாப்பிட்டு, சாப்பிட்டு... இப்ப எல்லாம் பஞ்சாபி அயிட்டம்ஸே பிடிக்க மாட்டேங்குது..."

இப்படி எதையாவது பேசினால், பிரியம்வதாவின் முகம் தெளிவாகும். கணவன் பக்கம் பார்த்து சிக்கனமாய் ஒரு புன்னகையைச் செலவிடுவாள்.

மனைவியை உள்ளங்கையில் வைத்துத் தாங்குவதில் மாமனார் ஒசத்தியா - மருமகன் ஒசத்தியா என்று பட்டி மன்றமே வைக்கலாம்.

**வெ**ளிநாடுகளில் வேலை பார்க்கும் இந்தியக் கணவர்களுக்கு - சாதாரணக் கணவர்களை விடவும் கூடுதல் பொறுப்புக்கள் உண்டு.

அதில் மிக முக்கியமானதுதான் மனைவியின் மனம் கோணாமல் பார்த்துக் கொள்வது.

நாடு விட்டு நாடு வந்து, வருஷக்கணக்கில் புருஷன் முகத்தையும், இன்னும் குறிப்பிட்ட சில நண்பர்கள் முகங்களையும் மட்டுமே பார்த்துப் பார்த்து, ஒரு மாதிரி சலித்துப் போயிருப்பார்கள்.

புடைவை, நகைகளைப் போட்டுக் கொண்டு எங்கேயும் போய் யாருடைய வயிற்றெரிச்சலையையும் கிளப்பி விட முடியாது! அதற்கான சம்பவங்களே ரொம்பவும் குறைவு. போதாக்குறைக்கு, கையைத் தட்டினால் ஆட்டோ வராது... எங்கே போக வேண்டுமானாலும் சுய சாரத்யம்தான். விஸ்தாரமாய் பரந்து விரிந்து கிடக்கிற 'மால்' ரக ஷாப்பிங் சென்ட்ட

ரில் எல்லாம்,- மருந்துக்குக்கூட 'பாண்டி பஜார்' சமாசாரங்கள் கிடைக்காது.

அது ஒரு மாதிரி வாழ்க்கை. ரொட்டியில் வெண்ணெயும், ஜாமும் தடவித் தின்றுவிட்டு, காபி என்கிற பெயரில் மாடு கழுவினத் தண்ணீர் மாதிரி எதையோ குடித்துவிட்டு ஆபீசுக்கு ஓடுவதும், சனி ஞாயிறில் அடுத்த ஒரு வாரத்துக்காகச் சமைத்து வைப்பதும்...

வேலைக்குப் போகும் பெண்களுக்கு, மிளகாயைக் கடித்தாற் போன்ற எரிச்சல் ரத்தத்தோடு கலந்து விட்டிருக்கும்.

வீட்டோடு இருக்கிற பெண்கள் குறைச்சல். இருந்தால் அது வேறு மாதிரியான அவஸ்தை...

ஆதலால் -

கணவர்கள் மிகுந்த ஜாக்கிரதையாக, மனைவிகளைக் கையாள வேண்டும்.

அம்மா, அப்பாவைத் தவிர, அமெரிக்காவில் இப்பொழுது எல்லாம் கிடைக்கிறது என்றாலும், இந்தப் பெண்களுக்கு அம்மாவும், அப்பாவும் அவ்வப்பொழுது அவசியம் தேவையாக இருக்கிறதே...

பிரியாவுக்கும் அதுமாதிரியான ஆசையெல்லாம் இருக்காதா?

நிறைய இருக்கிறது.

ஆனால், அதற்கான தருணம்தான் இதுநாள் வரையில் வரவில்லை.

அவளுக்குத் தெரிந்த இந்தியப் பெண்கள், தங்களது பிரசவத்தை அமெரிக்காவிலேயே வைத்துக் கொண்டு, உதவிக்குத் தங்கள் பெற்றோரை வரவழைத்து தங்களது தாபத்தை ,எல்லாம் தணித்துக் கொள்ள -

இன்னும் சிலர் வருடத்துக்கு ஒரு முறை தாங்கள் தாய்நாட்டுக்குச் செல்வதும், ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பெற்றோரைத் தங்களிடம் வரவழைத்துக் கொள்வதுமாய் இருக்க -

பிரியம்வதாவுக்கு இரண்டுமே இயலாததாக இருந்தது.

முதலாவதுக்கு இதுவரை சந்தர்ப்பமே வரவில்லை. அதென்னவோ ஐந்து வருடங்கள் கண்ணாமூச்சி விளையாட்டு போல - கரு ஜனித்த நாற்பது நாளிலும், ஐம்பது நாளிலும் ஓடி மறைந்து கொண்டேயிருந்தது.

இரண்டாவதாக - ஆசைக்கு அழைத்துக் கொண்டு வந்து வைத்துக் கொள்ளலாம் என்கிற பேச்சுக்கே இடமில்லை...

கிஷோரின் தந்தை பல்பீர்சிங் இந்திய ராணுவத்தில் கர்னலாக இருந்தவர்... இப்பொழுது மகன் வீட்டு மாடியில் கர்லா சுழற்றிக் கொண்டிருக்கிறார். இவருக்கும், பரியம்வதாவின் அப்பா நமது காதல் மன்னன் பரமேஸ்வரனுக்கும் ஆகவே ஆகாது...

கல்யாணத்தின்போது - அதாவது கிஷோர் - பிரியா கல்யாணத்தின்போது தான் - மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலத்



* பாடகி மாலதி

நட்பு

பதினைஞ்சு வருஷமா என்கூட கச்சேரி செய்த ரஜினி என் உயிர்த்தோழி. உற்சாக ஊற்று. டெய்லி ஒரு மணி நேரமாவது பேசுவோம். இப்போ கனடா போயிட்டாங்க. ஆனாலும் அடிக்கடி பேசிக்குவோம். அவங்க கொடுத்த 'ஜுவெல் பாக்ஸ்'லதான் என்னோட நகைகளை வைச்சிருக்கேன். அந்த உற்சாக ஊற்றை ரொம்ப மிஸ் பண்ணிட்டேன்.




கண்ணைப் பார்த்துச் சிரிப்பவன் - **காரியவாதி**

கற்பனையில் சிரிப்பவன் - **கவிஞன்**

இடம் பார்த்துச் சிரிப்பவன் - **எத்தன்**

எல்லா இடத்திலும் சிரிப்பவன் - **கோமாளி**

மோகத்தில் சிரிப்பவன் - **வெறியன்**

கூட்டத்தோடு சிரிப்பவன் - **சாமர்த்தியசாலி**

கொடுக்கும்போது சிரிப்பவன் - **சூழ்ச்சிக்காரன்**

இன்பத்தில் சிரிப்பவன் - **மனிதன்**

துன்பத்திலும் சிரிப்பவன் - **வேதாந்தி**

**- வயலூர் பா. குணா**

தின்போது, அவர்கள் வழக்கப்படி ஆணும் பெண்ணுமாக 'பாங்க்ரா' நடனமாட

பல்பீர் சிங் உற்சாக மிகுதியில், பருப்புத் தேங்காய் தட்டைச் சுமந்து கொண்டு, கெட்டிக் கரை பட்டுப் புடைவையும், வைரத்தோடு, மூக்குத்தியுமாய் ஜகஜ்ஜோதியாய் ஊர்வலத்தில் நடந்து கொண்டிருந்த சுகந்தாவின் வாயில் ஒரு ஜிலேபியைத் திணித்தார்.

அதெல்லாம் பஞ்சாபில் வேண்டுமானால் தமாஷ். இங்கே நம் பரமேஸ்வரனிடம் நடக்குமோ... நடந்த சண்டையில் பல்பீர் சிங்கும், அவருமாக அடித்துக் கொள்ளாத குறை... கல்யாணமே நின்று போயிருக்க வேண்டியது...

நடுத்தெரு என்றும் பாராமல், குதிரையில் பளபளவென ஷெர்வானி, தலைப்பாகை அணிந்து 'ஜம்'மென வந்து கொண்டிருந்த கிஷோர், அவசர அவசரமாய் இறங்கி வந்து, இரண்டு பேர் காலிலும் விழுந்து கெஞ்சியதால் -

பிரியம்வதாவின் கழுத்தில் தாலி ஏறியது...

'இனிமே அந்த மனுஷன் முகத்துல விழிக்கவே மாட்டேன்...' - இப்படி பரமேஸ்வரனும்...

'கொஞ்சம்கூட நாகரிகம் தெரியாத ஸவுத் இண்டியன்...' - இப்படி பல்பீர் சிங்கும் இன்னமும் பொருமிக் கொண்டிருக்கிறார்கள்!

போதாக்குறைக்கு கிஷோரின் தாய் ராஷ்மி 'பிரசவத்துக்காக அம்மா எதுக்கு வரணும்? என்னோட மூணு குழந்தைங்களும் குக்கிராமத்துல, கோதுமை வயலுக்கு நடுவுலதான் பொறந்தது... நானேதான் குழந்தைய எடுத்து, நஞ்சுக் கொடிய அறுத்து, சுத்தம் செஞ்சு, தோள்லே தூக்கிட்டு நடந்தேன்...?' - இப்படி அவ்வப்போது பிரியம்வதாவுக்கு விளக்கெண்ணெய் கொடுத்துக்கொண்டு, சோபா நிறைய மானாவாரியாய் அடைத்துக் கொண்டு, எதையாவது அரைத்து மென்றபடி இருக்கிறாள்.

நல்லவேளை... கிஷோரின் அக்காவும் தங்கையும் அமெரிக்காவிலேயே சற்றுத் தள்ளி - மூன்று மணி நேர விமானப் பயணத் தொலைவில் இருக்கிறார்கள்.

கிஷோரின் அதிர்ஷ்டம் - வாரா வாரம் சகோதரிகள் தாய் வீட்டுக்கு வரும் போதுதான் இவனும், மனைவியைப் பார்க்க வீடு வர வேண்டும்.

திங்கள் முதல் வெள்ளி வரை - அட்லாண்டிக் தீவில் உத்தியோகம்.

'பிரியம்வதாவின் சிரித்த முகம்' - என்பது இவனது ராசிபலனில் போட்டிருந்தால்கூட நிறைவேறாத விஷயம்.

ஆனாலும் - இந்த ஏழு மாதமாக அவன் கொஞ்சம் மலர்ந்திருந்தான்.

பிரசவத்துக்கு அவன் அம்மா வேறு வரப் போகிறாள்...

"அப்புறமென்ன...?" குழம்பினான் கிஷோர்.

(தொடரும்)

# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை

அன்புடன் அழைக்கிறது

அமரர் கல்கி ஐம்பதாவது நினைவு தினம்



## மீரா யாத்திரை; தாகூர் தரிசனம்; அதிர்ஷ்ட கவசம்

- "கல்கி" எழுதிய நூல்கள் அறிமுகம்

பாரத ரத்னா ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்களின்
திருவுருவப்படத்தை மாண்பமை நீதியரசர்
திரு கே.எஸ். பக்தவத்ஸலம் திறந்து வைத்து தலைமையுரை
ஆற்றுகிறார்.

நூல்கள் அறிமுகவுரை : திருமதி பாரதி பாஸ்கர்

●●

## காற்றினிலே வரும் கீதம்

(அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்பு நிகழ்ச்சி
வீடியோ திரைக் காட்சி)

ஜனவரி 22, 2005 சனிக்கிழமை
மாலை 6:00 மணி.

ருஷ்ய கலாசார மையம்,
74, கஸ்தூரிரங்கா சாலை, ஆழ்வார்பேட்டை,
சென்னை - 600 018

---

வாசகர்களையும் கல்கி அன்பர்களையும் வரவேற்கிறோம்.

நடிகர் மாதவன், தாம் படித்த ஜம் ஷெட்பூர் தட்சிண பாரதி மகிளா சமாஜ் பள்ளியின் அறுபதாம் ஆண்டு விழா நிகழ்ச்சிக்கு வந்திருந்தார். அவரோடு அதே பள்ளியில் படித்து, இப்போது உயர் பதவி வகிக்கும் சில பிரபலங்களும் மேடையில் அமர, சுமார் 2000 மாணவர் - மாணவியர் கலந்து கொண்டார்கள்; மாதவனைக் கேள்விகளால் துளைத்து எடுத்தார்கள்!

**நீங்கள் பள்ளியில் படிக்கும்போதே நடிகனாக வேண்டும் என்று நினைத்தீர்களா?**

எனக்கு நடிப்பதில் துளிக்கூட விருப்பம் இருக்கவில்லை. என்னுடைய நீண்ட காலத் திட்டம், குறுகிய காலத் திட்டம் எல்லாமே ஜாலியாக இருப்பது எப்படி என்பதுதான்.

**எந்த விளையாட்டில் உங்களுக்கு ஆர்வம்?**

பாஸ்கெட் பால். நன்றாக ஆட வேண்டும் என்று ஆசைப்பட்டேன்.

**உங்களிடம் முக்கியமான, பாராட்டத்தக்க குணம் எது?**

நம்பிக்கை வைப்பது.

**தியா மிஸ்ராவுடன் உங்கள் அனுபவம் எப்படி இருந்தது?**

என் மனைவி என்னிடம் கேட்பது மாதிரி அல்லவா நீங்கள் கேட்கிறீர்கள்! சரி, இருந்தாலும் பதிலைச் சொல்லி விடுகிறேன். ரொம்ப இனிமையான பெண் இந்த முன்னாள் மிஸ் இந்தியா!

**அழகான பெண்களுடன் நடிக்கும் போது உங்களுக்கு எப்படி இருந்தது?**

எப்படியும் இருக்கவில்லை! நடிப்பு என் தொழில். நடித்து முடித்துவிட்டால் அதை அப்போதே மறந்துவிடுவேன்.

**உங்களைத் தென்னிந்திய ஹ்ரித்திக் ரோஷன் என்று கூப்பிடலாமா?**

பாவம், ஹ்ரித்திக்கை ஏன் இன்சல்ட் பண்ணுகிறீர்கள்!

**நீங்கள் ஒரு சூப்பர் ஸ்டாரா?**

ஐயோடா, எத்தனையோ சூப்பர் ஸ்டார்கள் இருக்கிறார்கள். அவர்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருப்பார்கள். இதெல்லாம் முக்கியமில்லை.

**எங்களுக்கு உங்கள் அட்வைஸ் என்ன?**

உங்களை நினைத்து நீங்களே பெருமைப்படும் அளவுக்கு நீங்கள் இருக்க வேண்டும். யு ஷுட் பி ப்ரௌட் அஃப் ஹூ யூ ஆர். மகிழ்ச்சி தராத வேலை உங்களுக்குக் கொடுக்கப்பட்டாலும், புன்னகையுடன் அதை ஏற்றுச் செய்யுங்கள்.




**நீங்கள் நடிகராக வருவதற்கு எந்தவிதத்தில் கஷ்டப்பட்டீர்கள்?**

கஷ்டம் என்று அதைச் சொல்லமாட்டேன். ஆக்டிங்

ஸ்கூல் என்று எதுவும் இருக்கவில்லை. அதனால் நானே நடிப்பைக் கற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. அவ்வளவு தான்.

**உங்களுக்கு சிநேகிதிகள் - கேர்ல் ஃப்ரண்ட்ஸ் - இருக்கிறார்களா?**

உங்களிடம் சொல்ல மாட்டேன்.

**உங்களுக்குப் பெண்களிடம் இன்ட்ரஸ்ட் இல்லையா என்ன?**

விட மாட்டீங்களே... எனக்கு ஆண்களிடமும் இன்ட்ரஸ்ட் இல்லை. போதுமா?

**ஏன் ஒரே காதல் கதைகளாகவே படம் எடுக்கிறார்கள்? வேறு சப்ஜக்டே இல்லையா?**

காதல் எப்போதும் சாசுவதமாக இருக்கிற சப்ஜெக்ட். இமோஷனல் சப்ஜெக்ட். அதனால் அதையே மையமாக வைத்துப் படம் எடுக்கிறார்கள். ஏன், காதல் மையமாக இல்லாமல்கூட நிறையப் படங்கள் வந்திருக்கின்றனவே, நீங்கள் பார்த்ததில்லையா?

**உங்களின் இன்றைய நிலைமைக்கு என்ன காரணம்?**



இந்த ஜாம் ஷெட்பூரும், இந்தப் பள்ளிக்கூடத்துப் படிப்பும்.

**நடிப்பதற்கு வருமுன் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?**

கம்யூனிகேஷன் ஸ்கில்ஸ், பர்சனாலிடி டெவலப்மெண்ட் பத்தி எல்லாம் வகுப்புகள் நடத்திக் கொண்டிருந்தேன்.

**உங்கள் கண்களில் நீர் வரவழைக்கும் நிகழ்ச்சி?**

பிராணிகளை வதைக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியும்.

**நீங்கள் ஒரு நல்ல ரோல் மாடலாக இருக்க விரும்பவில்லையா?**

நான் ஒரு நடிகன். தயவு செய்து நடிகர் - நடிகைகளை எல்லாம் ரோல் மாடலாக எடுத்துக் கொள்ளாதீர்கள். நாங்கள் உங்களை எல்லாம் மகிழ வைக்கும் என்டர்டெய்னர்கள்தாம். லீடர்கள் அல்ல.

**தமிழ்ப்படங்களைவிட அதிகமாக இந்திப் படங்களில் நடிக்க மாட்டீர்களா?**

'ராம்ஜி லண்டன் வாலே' (இந்தி நள தமயந்தி) பாருங்கள். கொஞ்சம் புத்திசாலித்தனமான ஸ்க்ரிப்ட்டுகளையே நான் அதிகம் விரும்புகிறேன். (ஷொட்டு : தமிழ்ப்படங்களுக்கு. குட்டு : இந்திப் படங்களுக்கு!)

**ஸ்க்ரிப்ட் கிடைத்ததும் ஹோம் ஒர்க் செய்வீர்களா?**

ஆமாம். பள்ளியில் படிக்கும்போது செய்யாத ஹோம் ஒர்க்கை எல்லாம் இப்போது செய்து கொண்டிருக்கிறேன்! அப்போதுதான் அந்தப் பாத்திரமாக மாறி நடிக்க முடியும். அதற்கு ஏராளமாக மென்ட்டல் ஒர்க்கும் தேவை.

**உங்களுக்குப் பிடித்த நடிகர், நடிகை யார்?**

நடிகர் கமல்ஹாசன். நடிகை மனோரமா. எந்தப் பாத்திரத்தையும் அனாயாசமாக ஏற்று நடிக்கிற பெண்மணி இவர்.

**பாடகர், பாடகி?**

லதா மங்கேஷ்கர். சங்கர் மகாதேவன். பாலமுரளிகிருஷ்ணா.

**அரசியல்வாதிகளில் யாரைப் பிடிக்கும்?**

# "நடிகர்கள் ரோல்மாடல்கள் அல்ல!"

## மாதவன் சுளீர்!

அரசியல் பக்கமே போகாதவன் நான். அவர்களை எதற்காக இங்கே இழுக்க வேண்டும்? அவர்களிடமிருந்து உண்மையை வரவழைப்பது சிரமமான வேலை. மணி சங்கர் அய்யர் மட்டும் இவர்களில் கொஞ்சம் வித்தியாசமான மனிதர் என்று தோன்றுகிறது.

**- சாருகேசி**





இரண்டு கிட்னிகளுமே ஃபெயிலியரான நண்பருக்கு, உங்களின் ஒரு கிட்னியைக் கொடுப்பீர்களா? உங்கள் நண்பன் மேல் தவறிருந்தாலும் ஒரு 'ஸாரி' கேட்டு சண்டையை முடிக்க முன் வருவீர்களா? - இப்படி ஏதேதோ கேள்விகளைக் கேட்டு டெஸ்ட் வைத்து, உங்கள் நட்பின் நீள, ஆழ, அகலத்தை அளந்து காட்டுகிறது. www.oneishy.com/friendship/friendship_test.php இதே டெஸ்ட்டை உங்கள் நண்பருக்கும் ஃபார்வர்டு செய்து அவரது நட்பையும் டெஸ்டலாம்.

*(ஏம்ப்பா, என் கூட்டாளிக்கு இங்கிலிபீசு தெரியாதேன்னு சொல்றீங்களா, அதுக்கு நான் என்ன செய்ய!?)*



# உள்ளத்தின் ஜெராக்ஸ் காப்பி!

உங்கள் நண்பன் உங்களைவிட்டு வெகு தூரத்திலிருக்கலாம். அல்லது உங்கள் தோழியுடன் நீங்கள் ஏதாவது ஒரு சின்ன விஷயத்திற்காக கோபப்பட்டு பேசாமலிருக்கலாம். உங்கள் நட்பின் ஆழத்தை, அழகை உங்கள் நண்பனுக்கு நீங்கள் உணர்த்த விரும்பலாம். எல்லாவற்றுக்கும் சிறந்த, மென்மையான, சுலபமான வழி ஈ-கிரீட்டிங்ஸ்தான். அதுவும் நட்பு சம்பந்தப்பட்ட கார்டுகளின் கலக்கலான கலெக்‌ஷன்களோடு காணக் கிடைக்கும் தளம் 123greetings.com. 'தூரத்தில் இருந்தாலும், உதடுகளின் ஓரத்தில் புன்னகையைத் தருவிப்பவன் நண்பன்.' - இப்படி 'நட்பு' ஊறும் வாசகங்களுடன், வண்ண மிகு கிராஃபிக்ஸ் கார்டுகளை, உங்கள் உள்ளத்தின் ஜெராக்ஸ் காப்பியாக இருக்கும் நட்புக்கு அனுப்ப, தாராளமா இங்க வாங்க!

*(சும்மா... சோக்கா கீதுப்பா!)*



என் கண்ணிலிருந்து வலியோடு சொட்டும் ஒரு துளிக் கண்ணீரை நீ தாங்கிப் பிடிக்கிறாய் - அமைதியாக அதை உணருகிறாய், பகிர்ந்து கொள்கிறாய், அந்தத் துளி, வலி மெல்ல மெல்ல மறைந்து விடுகிறது.

என்ன ஒரு கவித்துவமான வரிகள்!

இப்படி சிநேகமான வரிகளைத் தரிசிக்க netpoets.com/poems/friend/க்கு வாங்க, பாய் ஃப்ரெண்ட்ஸ், கேர்ள் ஃப்ரெண்ட்ஸ், நெட் ஃப்ரெண்ட்ஸ், தொலைந்த ஃப்ரெண்ட்ஸ் என பல கலர்களில் கவிதைகள் கிடைக்கின்றன. நீங்களேகூட சொந்தமாக(!) கவிதை எழுதி அனுப்பலாம்.

*(தானா கிடைக்கணும் தோஸ்து! தோஸ்துக்கு கிடையாது வாஸ்து'ன்னு நான்கூட ஒரு கவிதையைத் தட்டி விட்டிருக்கேன்).*

**- ப்ரெளஸர்**

'காதல்' போன்று நடைமுறைத் தன்மை கொண்ட புதிய கதைகள், எப்போதாவது எட்டிப் பார்க்கும் தமிழ் சினிமாவில், ஆயுதம் போன்ற கதைகளுக்கு நோ பஞ்சம். சமீபத்தில் வெளி வந்து ஓடிய கில்லி, ஜெயம் ஆகிய மூன்றாம் தர மசாலாக்களின் ஒரு வரிக் கதையை அப்படியே லபக்கியிருக்கிறது ஆயுதம். அதாவது பால்யம் முதல், வில்லன் வெறித்தனமாகக் காதலிக்கும் நாயகியை, இடையில் வந்த நாயகன் காதலித்து கடத்திக் கொண்டு போனால் என்னாகும் என்ற புரட்சிகர(?)க் கதை.

இது போன்ற கதைகளில் மிகைப்படுத்தல்கள்தான் பிரதானம். ஆனால் ஆயுதத்தில் அத்தனை காட்சிகளையும் சுவாரஸ்யமாக சித்திரித்துவிட வேண்டும் என்பதில் படு கவனமாக இருந்து, அதில் வெற்றியும் பெற்று விடுகிறார் இயக்குனர். உதாரணத்துக்கு ஒரு காட்சி. நாயகியை மீட்க, நாயகனின் பெற்றோரைக் கடத்தி வாருங்கள் என கூலிப் படைக்கு உத்தர விடுகிறார் வில்லன். அடுத்த காட்சியிலேயே அவர்கள் கடத்தப்படுகிறார்கள். காட்சியின் முடிவில் அவர்களைக் கடத்தியது வில்லன் ஆட்கள் அல்ல! நாயகனே தமது பெற்றோர்களைக் கடத்தி வந்து விடுகிறார்.

அரசியல், போலீஸ் பலத்துடன் ஆட்டம் போடும் வில்லன் பாத்திரம், அடிக்கடி கோதாவில் இறங்காமல், கடைசிக் காட்சியில் மட்டும் ஹீரோவுடன் மோதுவது அசத்தலான ஆறுதல். பிரசாந்த் இப்போதெல்லாம் மீசையோடு ஆஜராகி, ஆக்ஷன் குஸ்திக்கு அடியேனும் ரெடி என்று முஷ்டியை மடக்கிக் குத்துகிறார். அடிப்படையில் தாமொரு கறுப்புப் பட்டை கராத்தே வீரர் என்பதை நிரூபிக்கும் விதமாக சண்டைக் காட்சியில் சளைக்காமல் சாகஸங்கள் புரிகிறார். ஆபாச நகைச்சுவையை உதறிவிட்டு ஆரோக்யமான நகைச்சுவையை நம்பத் தொடங்கியிருக்கும் வடிவேலுவின் காமெடி பஞ்ச்சஸ் கலக்கல் ரகம். பிட்பாக்கெட் திருடனாக இருப்பதை விட, தேநீர்க் கடை வைத்துப் பிழைக்கலாம் என்று முடிவுக்கு வரும்




வடிவேலு, முதல் போணியிலேயே மொத்தக் கடையையும் இழந்து போண்டியாகி விடுவதை நினைத்துச் சிரிக்கலாம்.

படத்தில் சரியான இம்சையென்றால், அது தினாவின் இசைதான். முனை மழுங்கிய அரிவாளை திறமையாகக் கூர் தீட்டியிருக்கிறார்கள் ஆயுதத்தில்.

- விஷுவல்தாசன்

● ஆவரெஜ்

# பத்திரிகையாளன் இலக்கியவாதி இல்லையா?

எந்தத் தமிழ்ப் பத்திரிகையை வேண்டுமானாலும் புரட்டிப் பாருங்கள். கதை, கவிதை எழுதுகிறவர் பெயர், கதைக் தலைப்புக்கு அருகிலோ, பிரதானமாகவோ பெரிய எழுத்தில் அச்சிடப் படும். ஆனால் பத்திரிகைக் கட்டுரை எழுதுகிறவர் பெயர், அதைவிடச் சிறிய எழுத்தில் கட்டுரையின் முடிவில் தான் இருக்கும். பத்திரிகைக் கட்டுரைகளில் என் பெயர் கட்டுரைத் தலைப்புக்கு அருகில் மேலே வருவதற்கு, எனக்குச் சுமார் இருபது ஆண்டுகளும், ஆயிரம் கட்டுரைகளும் தேவைப் பட்டன. ஆனால் நான் எழுதிய முதல் சிறுகதைக்கே என் பெயர் கதைத் தலைப் புக்குப் பக்கத்தில் அச்சாயிற்று.

பத்திரிகைக் கட்டுரை எழுதுவதைவிட சிறுகதை, கவிதை, நாவல் எழுதுவது மேலானது, கடினமானது, உன்னதமானது, என்றெல்லாம் சிலர் மனதுக்குள் இருக்கும் தவறான கருத்தே இந்த நிலைக்குக் காரணம். உண்மையில் இரண்டு வகை எழுத்தாளர்களுக்கும் அடிப்படை ஒன்றேதான். இருவரும் வாழ்க்கையிலிருந்துதான் எழுத வேண்டும்.



இருவருக்கும் மொழி மீது நல்ல ஆளுமை இருக்க வேண்டும். அவ்வளவுதான். ஒன்றைவிட மற்றது மேலானது என்றோ, இழிவானது என்றோ கருதுவது முதிர்ச்சியற்ற மனநிலைதான்.

சிறந்த கதாசிரியர்கள், கவிஞர்கள் பலர், சிறந்த பத்திரிகை எழுத்தாளர்களாகவும் இருந்திருப்பதே வரலாறு.

பாரதி, கல்கி, புதுமைப் பித்தன் மூவருமே இதற்குச் சிறந்த சான்றுகள். பத்திரிகைக் கட்டுரையாளராக, நிருபராக இல்லாமல், சிறந்த கதாசிரியர்களாக, கவிஞர்களாகப் பலர் இருப்பது போலவே, கதைகள், கவிதைகள் எழுதாமல் சிறந்த பத்திரிகையாளர்களாக இருந்தவர்களும் உண்டு.



ஞாநி

திருவி.க., சாமிநாத சர்மா, குத்தூசி, குருசாமி என்று ஒரு பட்டியலே போடலாம்.

உலகப் புகழ் பெற்ற லத்தீன் அமெரிக்க எழுத்தாளரான கேப்ரியல் கார்ஷியா மார்க்வஸ், பத்திரிகையாளராகவும் பணியாற்றுவதில் பெருமை கொள்பவர். "தன் அசல் தொழில் பத்திரிகையாளனாக இருப்பதுதான்" என்று அவர் கூறியிருக்கிறார். "ஜர்னலிசத்தில் ஒரே ஒரு தகவல் மட்டும் தவறானதாயிருந்தால், அது முழுப் படைப்பையும் பாதித்து விடுகிறது. மாறாக, கதைகளில் ஒரே ஒரு உண்மை இருந்தாலே, அது முழுப் படைப்புக்கும் நியாயத்தை ஏற்படுத்தித் தருகிறது" என்பது எனக்குப் பிடித்த மார்க்வஸின் மேற்கோள்.

இங்கே கதைகளுக்கும் கவிதைகளுக்கும் சாகித்ய அகாதமி விருது, ஞானபீட விருது, குமரன் ஆசான் விருது, வள்ளத்தோல் விருது என்றெல்லாம் ஏற்படுத்தி வைத்துவிட்டு, பத்திரிகை எழுத்தை ஒதுக்கி வைத்திருப்பது முதலில் கைவிடப்பட வேண்டும்.

அமெரிக்காவில் சினிமாத் துறையின் ஆஸ்கருக்கு நிகராக செல்வாக்குடன்



இருப்பது புலிட்சர் விருது. சரியாக நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பத்திரிகையாளர் ஜோசப் புலிட்சர், ஜர்னலிசத்துக்கென்றே தனி விருதுகளும் கல்லூரியும் ஏற்படுத்த வேண்டுமென்று உயில் எழுதி வைத்தார். இப்போது புலிட்சர் விருது இசை, நாடகம் உட்பட இருபத்தியொரு பிரிவுகளில் ஆண்டு தோறும் வழங்கப்படுகின்றன. தினசரி, வார இதழ்களில் வெளியாகும் செய்திக் கட்டுரைகளில் பல பிரிவுகளுக்கு இந்த விருதுகள் தரப்படுகின்றன.

இந்தியாவில் புலிட்சருக்கு நிகரான விருதுகள் இன்னமும் இல்லை. கல்கி பெயரில் இசை - நாட்டிய விமர்சனத்துக்கும், ஆதித்தனார் பெயரில் சிறந்த நிருபத்துக்கும், குத்தூசி, குருசாமி பெயரில்



சிறந்த அரசியல் கட்டுரைக்கும், பெ.நா. அப்புசாமி பெயரில் சிறந்த அறிவியல் கட்டுரைக்கும், தலா ஒரு லட்சம் ரூபாய் பரிசுகள் ஆண்டுதோறும் அளிக்க வேண்டுமென்பது என் விருப்பம். பரிசுக்கான பிரிவுகளை இன்னும் விரிவுபடுத்தலாம். யாரேனும் இதற்காக ஒரு அசட்டு தமிழ்ப் படம் தயாரிப்பதற்கு ஆகும் செலவை ஒரு முறை ஒதுக்கினால் போதும்.

கட்டுத் தொகுப்பு : அமுதுமனா

# விவேக் ஓபராய் நிஜ ஹீரோதானே?



★ தோல்வியில் வெற்றி

● டி. முருகேசன்,
திருவாரூர்★

? சென்ற ஆண்டு பிளஸ் டூ தேர்வில் ஒவ்வொரு பாடத்திலும் அதிக மார்க் பெற்ற முதல் ஐந்து மாணவர்களின் விடைத்தாள்களை அப்படியே புத்தகமாக வெளியிட கல்வித்துறை முடிவு செய்திருப்பது பற்றி...?

! தேவையற்றது. (பழைய அல்லது மாடல்) கேள்வித்தாள்களுக்கு விடை எழுதிப் பழகும் பழக்கம் பல காலமாக இங்கு இருந்து வருகிறது. இந்த பரீட்சை முறை மாற வேண்டும் என்பது தான் கல்வியாளர் கருத்து. பெரும்பாலான நம் மாணவர்கள் கல்வி பெற முயற்சி செய்வதில்லை. மார்க் வாங்கத்தான் முனைகிறார்கள். கல்வித் துறையின் திட்டம் இந்த நிலையை நிரந்தரமாக்குகிறது.

● என். ரங்கநாயகி,
கோவை - 9.

? தனக்கு ஒவ்வாத சூழ்நிலையிலும் சுனாமி நிவாரண நிதி திரட்டச் சென்று மூச்சுத் திணறலால் உயிரை விட்டாரே சின்னத்திரை நடிகை சிந்து...?

! உயிரைக் காக்க நினைத்தவர் தமது உடல் நிலையைக் கருத்தில் கொள்ளாதது வேதனைதான். ஒவ்வாமை நோயுள்ளவர்கள் எந்தக் கணத்திலும் அலட்சியமாக இருக்கக் கூடாது என்பதை உலகுக்கு உணர்த்தும் சோகமான மரணம்.

● எம். எழில்மலை,
குடியாத்தம்.

? சங்கரமடத்தை தமிழக அரசு சட்டம் கொண்டு வந்து தன் கையில் ஏற்றுக் கொண்டால் எப்படி இருக்கும்...?

! நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு விபரீதமாக இருக்கும்.

● தாமரைச்செல்வி,
கோபிசெட்டிபாளையம்.

? கடல் கொந்தளிப்பால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவ டீ.வி மூலம் அழைப்பு விடும் நடிகர்களுக்கு மத்தியில், நிவாரணப் பணியில் களமிறங்கியுள்ள விவேக் ஓபராய் நிஜ ஹீரோதானே?

! வசதியும் வாய்ப்பும் உள்ள அவர் மட்டும்



★ ஸ்திரமான தன்னடக்கம்



★ பலம் டூ ★ பலம் ஒன்

ஹீரோ அல்ல... அவை இல்லாதபோதும் உதவ வேண்டும் என சிரமதானம் செய்யும்



● சாம்பின் ஹீரோ!

பல்லாயிரம் சராசரி மக்களும் ஹீரோக்களே! 'ஒரே ஒரு கிராமத்தை தத்து எடுத்துக் கொண்டது சரியல்ல' என்று விமர்சிக்கும் சக நடிகர்கள்தான் வில்லன்கள்!



● சும்மா ஸ்வீட்!

● இரா. சக்கரபாணி, மதுரை - 7.

? பீஹார் மாநிலத்தில் சாலைகள் சரியில்லை. பாலங்கள் இல்லை. மின்வசதி இல்லை. எங்கு திரும்பினாலும் ஏழைமை. அமைச்சர்கள் ஊழல்வாதிகள்... அப்படியிருந்தும் லாலுவுக்குத்தானே மக்கள் வாக்களிக்கிறார்கள்...?

! அதானே? என்ன காரணம்? வாக்காளர்களுக்கு அவர் லஞ்சம்கூடத் தருவதில்லையே! இனிப்பு வாங்கிச் சாப்பிட அன்பளிப்புதானே கொடுப்பார்!

● உமரி பொ. கணேசன், மும்பை - 37.

? இந்திய டென்னிஸ் வீரர்கள் லியாண்டர் பயஸ் - மகேஷ் பூபதி இருவரும் நாட்டுக்காக விளையாடுவதுபோல் தெரியவில்லையே...?

! யார் சொன்னது...? ஸ்ரீசாப்பன் - மோயா ஜோடியிடம் தோற்றது நாட்டுக்காகத்தானே! 'வெற்றியில் கிடைத்த 24 லட்சத்தை சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்குக் கொடுக்கிறோம்' என்று ஜெயித்தவர்கள் அளித்த வகையில், அது ஆட்டத்துக்குக் கிடைத்த வெற்றிதான். பரிசு இந்தியர்களைத்தானே சேர்கிறது.

● ஆர். ஜேஸ்மின் ரமேஷ்,
மதுரை - 20.

? ஆயிரம் கி.மீ மதில்சுவர் சுனாமியின் சீற்றத்துக்குத் தடுப்பாகுமா...?

! வீண் பண விரயம். காண்டிராக்ட் ஊழல்களுக்கு நிச்சயம் இடம் தரும். இயற்கை அழகு பாழாகும். சுனாமி முன்னறிவிப்புத் திட்டம்; கடலுக்கும் குடியிருப்புகளுக்குமிடையே குறைந்த பட்ச தூரம்; ஆபத்துக் காலத்தில் தானியங்கி இயந்திரம்போல் செயல்படும் பாதுகாப்புத் திட்டம். இவைதான் பயன் தரும்.

● எஸ். அசாந்தி,
பிள்ளையார்குளம்.

? 165 அடி உயரத்துக்குச் சுற்றிச் சுழன்று உக்கிரமாகச் சுனாமிப் பேரலை தாக்கிய போதும், குமரி முனையில் உள்ள வள்ளுவர் சிலை கலங்காது நின்றதைக் கவனித்தீர்களா...?

! 'தொன்மையான சிற்ப சாஸ்திரப்படி அமைக்கப்பட்டது அச்சிலை' என்று அதை அமைத்த கணபதி ஸ்தபதி தெரிவித்ததோடு, சிலையைக் காத்தளித்த பெருமையை அந்த சாஸ்திரத்துக்கே உரிய

❐ ரூ 100 பரிசு பெறுபவர்:
ஏ. மாணிக்கவாசகம்,
79, டெல்கோ கெஸ்ட் ஹவுஸ்,
சீனியர் ஆபீசர்ஸ் காலனி,
பிம்ப்ரி, பூனே - 18

தாக்கி பெருந்தன்மையுடன் எழுதி யுள்ளாரே - கவனித்தீர்களா...?

● வி. உதயகுமாரன், வீரன்வயல்.
*? 'ஜனகண மன'வில் உள்ள 'சிந்து'வை நீக்குவதற்கு வழக்குத் தொடுத்திருப்பது சரிதானே...?*
! தராகவின் எதிர் வழக்கு: சிந்து இன்று பாகிஸ்தானின் ஒரு பகுதியாக இருந்தாலும் சிந்துக்கள் நம்மவரே. சிந்து நதி நமக்கும் சொந்தமே. மேலும், இப்படி பூகோள ரீதியாக தேசிய கீதத்தைக் கூறு போட்டுப் பார்ப்பது அபத்தம்! நம் நாட்டைக் குறித்த பெருமிதத்தை உண்டாக்கும் தேசிய கீதம், சர்வ நிச்சயமாகப் பிற நாடுகள் பேரில் துவேஷம் ஏற்படுவதற்காக ஏற்பட்டதல்ல.

● எஸ். கருணையானந்தம், உசிலம்பட்டி.
*? சுனாமி அழிவுக்கு இரங்கல் தெரிவிக்க, இந்திய தூதரகத்துக்கு புஷ்ஷும் கிளின் டனும் ஒன்றாக வந்ததை 'ஜெ'வும் கலை ஞரும் பார்த்திருந்தால்...?*
! கலைஞரே நேரில் போகாவிட்டாலும், கலைஞர் வழங்கிய சுனாமி நிதியை ஸ்டாலினே நேரில் சென்று ஜெய லலிதாவிடம் தந்துள்ளாரே, அந்த அளவுக்கு ஆனந்தப்படுங்கள் மிஸ்டர் கருணையானந்தம்.

● எஸ். ரேணுகா, நீடாமங்கலம்.
*? நம் முதல்வரின் பலம், நம் பிரத மரின் பலம் - ஒப்பிடுக...?*

* ரூ 50 பரிசு பெறுபவர்:
டி. முருகேசன்,
3/151, ஜி.ஆர்.டி கார்டன் மாடி,
திருவாரூர் 610 001

! பிரதமரின் பலம்: அறி வுரை கூறுவது. முதல்வரின் பலம்: அந்த அறிவுரையை மீறுவது.

● ஏ. மாணிக்கவாசகம், பூனே - 18❐
*? துறவறத்துக்கும் இல்லறத்துக்கும் எவ்வளவு தூரம் மதிப்பளிக்க வேண்டும்?*
! இரண்டுக்கும் சமமான மதிப்பு உண்டு. அதனால்தான் இரண்டையுமே அறம் என் றார்கள். ஆனால் ஒரு வித்தியாசம். துறவற நிலையிலும் இல்லத்தை நினைப்பவன் வேஷதாரி. சில காலம் இல்லறத்தில் ஈடு பட்ட பின்னர், இல்லத்தில் தொடர்ந்து வாழ்ந்த வண்ணம் முற்றும் துறந்த நிலையை எய்துபவன் ஞானியருள் பெரும் ஞானி. ஜனகர் அப்படி வாழ்ந்ததாக ராமாயணம் சொல்லும். நம் காலத்தில் ராஜாஜி.

● எம். ஹரிஹரன், பழனி.
*? இன்றைய சூழலில், டீ.வி பார்க்காமல் உங்களால் எத்தனை நாள் இருக்க முடியும்...?*
! காசு கொடுத்து டீ.வியை வாங்கி, செட் டாப் பாக்ஸுக்கு வேறு பணம் அழுது விட்டு, அப்புறம் டீ.வி ஏன் பார்க்காமல் இருக்க வேண்டும்? அவசியமான, நல்ல கலையம்சமுள்ள நிகழ்ச்சிகளைப் பார்க் கத்தான் வேண்டும். அளவுக்கு அதிகமாக, கண்ட கண்டதைப் பார்த்து, கண்ணையும் மனசையும் நேரத்தையும் வீணாக்கிக் கொள்ளக் கூடாது. அவ்வளோதான்.

''மன்னரோட கிரீடம் ஏன் கறுப்பா இருக்கு?''
''தலைக்கு டை அடிச்ச உடனே மாட்டினா இப்படித்தான்!''
- அம்பை தேவா



முடிஞ்சு போன வரலாறுல கற்பனை கலந்து எழுதலாம், கல்கி எழுதின சரித்திரக் கதை மாதிரி; அல்லது நடக்கக் கூடும்ன்றதை ஃபான்டஸைஸ் பண்ணி எழுதலாம், பல மேலை நாட்டவர் ஸயன்ஸ் ஃபிக்ஷன் எழுதியிருக்கிற மாதிரி. ஆனா சமுதாயத்துல இப்போ இந்த மினிட் நடந்துக்கிட்டிருக்கிற ஒரு அதிர்ச்சி தரும் விஷயத்தை, வனதேவதை கதை மாதிரி ஃபான்டஸைஸ் பண்ணி எழுதினா...?



இந்திரா பார்த்தசாரதி கல்கியில எழுதின 'வேத புரத்து வியாபாரிகள்' (தொடர்கதை) மாலன் எழுதிய 'அறம்' (சிறுகதை - அகெய்ன் கல்கி) ஆகிய இரண்டும், இது போன்ற முயற்சிகள். ரொம்ப சக்ஸஸ்ஃபுல் முயற்சிகள்ன்றது கமியோட தாழ்மையான கருத்து.

# இன்னொரு ஹர ஹர சங்கர...?

நிகழ்வுகளின் போக்கை விமர்சிக்காமல், அதன் அபத்தத்தையும் மானுட வீழ்ச்சியையும் அப்படியே பிக்சரைஸ் பண்ணிட்டே போகிறபோது, படிக்கறவங்களுக்கு நிலைமையின் பயங்கரம் நல்லா உறைக்குது.






இந்த வரிசை முயற்சிகள்லே இப்போ இடம் பிடிச்சிருக்கிற புத்தகம் 'ஹர ஹர சங்கர'. ஜெயகாந்தன் தாம் சித்திரிக்கத் தேர்வு செஞ்ச தற்கால நிகழ்வை விமர்சிக்கலைன்னாலும், நியாயப்படுத்த மௌனமா முயற்சி செஞ்சிருக்கார். அப்படிச் செய்யறதேகூட விமர்சனம்தானேன்னு நாம கேட்கலாம். "எந்த விதமான விமர்சனமாக இருந்தாலும், விமர்சனம் செய்பவர்கள் தம்மை அடையாளம் காட்டிக் கொள்ளும் விமர்சனமாகத்தான் இருக்கும்" அப்படின்னு, போன வாரம் கல்கியில ஜெயகாந்தனே பேட்டி கொடுத்திருக்கிறதுதான் ஞாபகம் வருது.

சூரப்பன் பாத்திரத்தை உருவாக்கி ஃபான்டஸைஸ் செய்ததோடு, சங்கராச்சார்யார் கைதை நிறையவே ரொமான்டிஸைஸு’ம் செய்திருக்கிறார் கதாசிரியர். இந்தக் கைதும், அதையொட்டிய குற்றச்சாட்டுகளும் பின்புலமும், சமுதாயத்தில் அது ஏற்படுத்தியுள்ள, இனி ஏற்படுத்தப் போகிற தாக்கமும் மிகக் குறைத்து, மதிப்பிடப்பட்டுள்ளன.

இவ்வளவு பார்த்தால் போதும் என்று ஜெயகாந்தன் கருதியிருக்கலாம். ஆனால் உணர்ச்சி, நம்பிக்கை, அரசியல், அவநம்பிக்கை, சூழ்ச்சி, மர்மம், சதி என்று ஆழநோக்கி, தெளிவுடன் வெளிப்படுத்த இந்தக் களத்தில் நிறைய கொட்டிக் கிடக்கிறது. இன்னொரு ஹர ஹர சங்கர எழுத யார் முன்வருவார்கள்...?

கமி

# குறையொன்றுமில்லை

கிருஷ்ண ஸ்மரணம் மாத்திரம் இருந்தால் போதாது. கிருஷ்ண 'அனு ஸ்மரணம்' இல்லாது போனால் பிரயோஜனமில்லை. 'அனு' என்கிற உபசப்தத்துக்கு என்ன அர்த்தம் என்றால், கிருஷ்ணனுக்கு நாம் தாஸன் என்கிற அறிவோடு ஸ்மரணம் பண்ண வேண்டும். 'கிருஷ்ணன் பரன்' என்று தியானம் செய்தால் போதாது. 'கிருஷ்ணன் பரன்; அவனுக்கு நாம் தாஸன்' என்கிற அறிவோடு தியானம் பண்ணுவதுதான் கிருஷ்ண அனு ஸ்மரணம்.

கிருஷ்ணானுஸ்மரணம் பரம் - இதைப் பண்ணினால்தான் யக்ஞங்களுக்கு முழுப் பலன். கிருஷ்ணானுஸ்மரணம் மட்டும் இருந்துவிட்டால், யக்ஞ லோபம் இருந்தாலும், மந்திர லோபம் இருந்தாலும், திரவிய லோபம் இருந்தாலும், நியம லோபம் இருந்தாலும் லோபங்களெல்லாம் போய், அந்த யக்ஞம் நன்றாக நடந்ததாகவே கொள்ளப்படும்.

அதனால் கிருஷ்ணனை தியானம் பண்ணு. கிருஷ்ணனை தியானம் பண்ணினால் அங்கேயே எல்லா யக்ஞங்களும் முடிந்து போய்விடுகிறது.

- இதை பீஷ்மாச்சார்யார் சொல்கிறார். அங்கே எதிரே பகவான் கிருஷ்ணனே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருக்கிறான்... அப்போது பீஷ்மாச்சார்யார் சொல்கிறார்; அவனைப்



பார்த்தே சொல்கிறார்: ஆகையினாலே, இந்த யக்ஞங்கள் அனைத்தும் அவனிடம் அல்லவா சங்கிதமாகிறது!

பிராமணர்கள் பண்ணக்கூடிய பெரிய யக்ஞம் - பௌண்டரீகம் என்று அதற்குப் பெயர்.

க்ஷத்ரியர்கள் பண்ணக் கூடியது அசுவமேதம். பெரிய யக்ஞம் இது.

பௌண்டரீகத்தைச் சொல்லி, அசுவ மேதத்தைச் சொல்லி, வேதம் முடிகிறது.

பௌண்டரீக மஹாயக்ஞத்தில் ஒரு அழகான வாக்கியம். அது என்ன விவரிக்கிறது என்றால், அந்தக் காலத்தில் யக்ஞங்கள் பண்ணுகிற போது, எல்லோரும் தேவதைகளை நேரில் பார்த்ததை விவரிக்கிறது.

தேவதைகள் நேரில் வந்து ஹவிஸை வாங்கிக் கொண்டு போவதைப் பார்க்கக் கூடிய பாக்கியம் அவர்கள் பெற்றார்கள். இப்போது நாம் யக்ஞம் பண்ணினால் தேவதைகள் கண்ணுக்கு நேரே வருவதில்லை. ஆனாலும் யக்ஞத்தை நாம் பண்ணுகிறோம்.

ஏன் தேவதைகள் வருவதில்லை என்று கேட்டால், அவர்களை வரவழைப்பதற்கு உண்டான சக்தி, சாமர்த்தியம், பிரார்த்தனை, நிஷ்டை, நம்மிடத்திலே இல்லை. மந்திரம் இருக்கிறது... மந்திரத்தை நாம் சொல்கிறோம். ஆனால் அந்த நிஷ்டை நமக்கு இருந்தால் பலனே வேறு மாதிரி... ஏனென்றால் மந்திரம் பாதி; அனுஷ்டானம் பாதி.

அனுஷ்டானம் இல்லாமல், கேவலம் மந்திரத்தை மாத்திரம் உச்சாரணம் பண்ணினால் பலனைக் கொடுக்காது. பூர்வ காலத்தில் அவர்கள் மிகவும் அனுஷ்டாதாக்களாக இருந்து அந்த மந்திரத்தை உச்சாரணம் பண்ணினதனாலே, அந்த தேவதைகளெல்லாம் நேரே அதை வந்து வாங்கிக் கொண்டு போவார்கள். எல்லோருமே - சதஸ்ஸிலே இருக்கக் கூடியவர்கள் அத்தனை பேருமே அந்த தேவதைகளைப் பார்ப்பார்கள். இந்த பௌண்டரீக மகா யக்ஞத்திலே பரமாத்மா அழகாக அக்னி குண்டத்திலே எழுந்தருளி, நேரே ஹவிஸை வாங்கிக் கொள்வான் என்கிறது வேதம்.

மஹரிஷிகளெல்லாருமே பெரிய எஞ்சினியர்கள்; கட்டடக்கலை நிபுணர்கள். அவர்கள் யக்ஞ வாடிகை அமைத்ததே ஓர் அழகு. இப்போது பலவிதமான கட்டடக் கலைகள், பல விதமான நூதனங்கள் பார்க்கிறோம்.



அப்போதே இவை போல உண்டு. பிரா சாதம் என்பதாக ஒன்று கட்டப்பட்டது. அதை 'மார்ஜனீயம்' என்று வேதம் குறிப்பிடுகிறது. இங்கிலீஷில் சொல்ல வேண்டுமானால் பால்கனி!

வெளியிலே வந்து அப்படி நின்று கொண்டு எல்லாவற்றையும் பார்க்கும்படி யான இடம்.

யக்ஞ வாடிகையிலே இந்த மாதிரி பிராசாதமானது அமைந்திருக்கும். ஹோம மானது நடந்து கொண்டயிருக்கும். அப் போது அந்த இடத்திலே தலையிலே கும் பத்தை வைத்துக் கொண்டு ஒரு ஸ்த்ரீ நாட்டியமாடுவாள். பூரண கும்பம். அதிலே ஜலம் இருக்கும். அதிலேயிருந்து ஒரு சொட்டு ஜலம் கீழே சிந்தக் கூடாது. அந்த நாட்டியம் நடந்து கொண்டே இருக்கிறபோது, இங்கே ஹோமம் நடந்து கொண்டே இருக்கும். அப்போது பகவான் எழுந்தருள்வான்.

யக்ஞத்திலே வீணா கானமும் உண்டு. வீணையை வாசிக்க வேண்டும். நாட்டி யம், கானம் எல்லாமே உண்டு. இவ்வாறு நடக்கிற பௌண்டரீக மஹா யக்ஞத் திலே, பகவான் நாராயணன் எழுந்தருளி அந்த ஹவிஸை வாங்கிக் கொள்கிறான். யக்ஞத்தின் பூரண பலனானது எல்லோ ருக்கும் கிடைக்கிறது. ஒருத்தர் யக்ஞம் பண்ணினால், அதன் மூலம் எல்லோருக் குமே க்ஷேமம் ஏற்படுகிறது. எல்லோருக் கும் க்ஷேமம் ஏற்பட வேண்டும் என்பது தான் யக்ஞத்தின் பிரார்த்தனையே.

பௌண்டரீக மஹா யக்ஞத்தின் பல னைக் கொடுக்கக் கூடியவன் பரமாத்மா. காலத்திலே வந்து பலனைக் கொடுக்கக் கூடியவன். காலத்துக்கு முன்னேயும் வர மாட்டான். பின்னேயும் வரமாட்டான். அந்தச் சமயத்தில்தான் வருவான்.

மந்திரராஜபத ஸ்தோத்திரத்தில் 'ஸ்வகாலே ஸம்ப்ராப்தே' என்று வருகிறது. உரிய காலத்தில் அவன் வருவான். சாயங் காலத்தில் - பகலுமில்லாத இரவுமில்லாத தருணத்தில் வந்து தோன்றி, ஹிரண்ய கசிபுவை மாய்த்து, சாது சம்ரக்ஷணம் பண்ணினான்.

ஆகவே, காலத்திலே வந்து உபகாரம் பண்ணக் கூடியவன் அவன்.

காலத்திலே முன்னே வந்து ரக்ஷிக்கக் கூடியவன், இடத்திலே முன்னே வந்து ரக்ஷிக்கக் கூடியவன்.

அர்ஜுனனுடைய தேர்த்தட்டிலே முன்னே உட்கார்ந்து கொண்டு துஷ்ட சதுஷ்டையங்களை நிரஸித்து, துரி யோதன துச்சாதன கர்ண சகுனியை நிர ஸித்து, அந்த பஞ்ச பாண்டவர்களைக் காப்பாற்றினான். இது இடத்திலே முன் நின்றது.

காலத்திலே முன் நின்றது எங்கே என் றால், அம்பரீஷ சரித்திரத்திலே பார்க் கலாம். அம்பரீஷனுக்கு துர்வாஸராலே ஹிம்சை ஏற்படப் போகிறது என்பதை உணர்ந்துதான், பரமாத்மா ஒரு நாள் அவனுக்கு எதிரிலே வந்து தோன்றினான். அம்பரீஷன் பிரார்த்திக்காமலேயே வந்து தோன்றினான்.




"ஹே அம்பரீஷா! உன்னுடைய பூஜைக்கு மெச்சி, 'என்னிடத்திலே இருக் கிற இந்த சுதர்ஷன ஆழ்வாரை - இந்த சக்ராயுதத்தை உனக்குக் கொடுக்கிறேன். இதை வைத்துக் கொண்டு நித்யம் நீ பூஜை பண்ணு" என்று முதலிலேயே கொடுத்து விட்டுப் போய்விட்டான்.

காலத்திலே முன்னே வந்து உபகாரம் பண்ணினான். துர்வாஸரால் உண்டாக் கப்பட்ட பூதத்தை சுதர்ஷனாழ்வார்தான் நசுக்கிப் பொசுக்கினார். அதற்கப்புறம் துர்வாஸரை ஓட ஓடத் துரத்துகிறார் சுதர்ஷனாழ்வார்! கடைசியிலே அந்த துர்வாஸருக்கு நல்ல புத்தி ஏற்பட்டு, அம் பரீஷனிடத்திலே தான் பட்ட அப சாரத்தைப் போக்கிக் கொள்கிறார்.

- இது பகவான் காலத்திலே முன்னே வந்து ரக்ஷித்த நிகழ்ச்சி.

*'முப்பத்து மூவர்க்கும் அமரர்க்கும் முன் சென்று*
*கப்பம் தவிர்க்கும் கலியே துயிலெழாய்'*

என்று ஆண்டாள் பாடுகிறாள். முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் முன்னே சென்று என்றால், காலத்திலே முன்னே சென்று, இடத்திலே முன்னே நின்று, எல்லோருக்கும் அவரவர் ஹ்ருதயத்திலே இருக்கிற கப்பத்தை - கஷ்டத்தை - அந்த நடுக்கத்தைப் போக்கி உபகாரம் பண்ணக் கூடிய உத்தமன் என்று அந்த எம்பெருமானைக் கொண்டாடுகிறாள்.

பூதம் பவ்யம் பவிஷ்யது

- பூர்வ காலத்திலேயேயும் அவன்தான் உபகாரம் பண்ணினான். நிகழ் காலத்திலேயும் உபகாரம் பண்ணுகிறான். வருங் காலத்திலும் அவன்தான் உபகாரம் பண்ணவிருக்கிறான்.




**சா**மானியமாக உலகத்திலே ஒரு வாக்கியம் பேசுவார்கள். அக்ஞானத்திலே பேசப்படுகிற அந்த வார்த்தை, நம் காதிலே அடிக்கடி விழக்கூடியது. அது என்னவென்றால்.... ஒருத்தர் சொல்கிறார்:

"தேதி இன்றைக்கு இருபத்தஞ்சு ஆகிவிட்டது. எப்படியோ குடும்பத்தை இந்த இருபத்தஞ்சாம் தேதி வரைக்கும் மெள்ள நகர்த்திட்டேன் சிரமப்பட்டு. அப்புறம் இருபத்தாறு, இருபத்தேழுன்னு மேல் வரும் நாட்களை பகவான் நடத்திக் கொடுத்து விட்டானானால், ஒன்றாம் தேதி எனக்கு பத்தாயிரம் ரூபாய் பணம் வந்து விடும். அதை வைத்துக் கொண்டு அடுத்த மாதம் ஓட்டிவிடுவேன்."

நடுவிலே இருக்கிற ஐந்து நாட்களுக்கு பகவான் உபகாரம் பண்ண வேண்டும் என்கிறார் இவர்!

இதுவரைக்கும் - இருபத்தைந்து தேதி வரைக்கும் இவர் நடத்திவிட்டார்... அப்புறம் முதல் தேதிக்குப் பிறகு பத்தாயிரம் ரூபாய் ரக்ஷிக்கும்... நடுவிலே ஐந்து நாட்களுக்குத்தான் பகவான் ரக்ஷிக்க வேண்டும்!

இவர் இந்த ரக்ஷகர்களை எத்தனை இடத்திலே போடுகிறார் பாருங்கள்...! இவரே ரக்ஷகர்; பகவான் ஏதோ நடுவில் கொஞ்சம் நாளைக்கு; அப்புறம் பணம் ரக்ஷிக்கும் என்கிறார்.

எப்பொழுதுமே - முன்னேயும் ரக்ஷித்தவன் அவன்தான். இப்போதும் ரக்ஷிப்பவன் அவன்தான்; நாளைக்கும் ரக்ஷிக்கப் போகிறவன் அவன்தான். ஒருத்தர் மூலமாக நமக்கு ஓர் உதவி கிடைத்தது என்றால், அவர் மூலமாக நமக்கு அந்த உதவியைப் பண்ணியவன் பரமாத்மாதான் என்று நினைக்க வேண்டும்.

பெரிய லாரி... வேகமாக வருகிறது. அது ஒருத்தர் மேலே இடித்தால் விழுந்து பிராணனே போய்விடும். திடீரென்று அங்கே வருகிற வேறொருத்தர் அவர் கையைப் பிடித்து இழுத்துக் காப்பாற்றுகிறார். பகவான்தான் அந்தக் காரியத்தை நடத்தி வைத்தார் என்று நாம் பகவானுக்குத்தான் கிருதக்ஞத்தைச் சொல்ல வேண்டும். ஏனென்றால் ம்ருத்யு (மரணம்) எங்கே இருக்கிறான் என்றால், ம்ருத்யு ஒவ்வொருத்தர் தோள் மேலேயும் உட்கார்ந்திருக்கிறது என்கிறது சாஸ்திரம். நம்மை அமுக்குவதற்கு எப்பொழுதுமே நம் தோள் மேலே ம்ருத்யு தேவதை உட்கார்ந்தேயிருக்கிறது. 'எப்போது இவன் அகப்படுவான்?' என்று பார்த்துக் கொண்டேயிருக்கிறது.

ஆனால், நாம் ரக்ஷிக்கப்பட்டு 96 வயது, 98 வயது, 60 அல்லது 70 வயது என்று வாழ்ந்து கொண்டிருக்கிறோமே, ம்ருத்யுவிடம் அகப்படாமல் எப்படி நம்மால் வாழ முடிகிறது...?

நமக்குள்ளே அந்தர்யாமியாக பகவான் உட்கார்ந்திருக்கிறான் பாருங்கள். அவன்தான் ம்ருத்யுவிடமிருந்து நம்மை விலக்கிக் கொண்டே இருக்கிறான்.

ஆகையினாலே ம்ருத்யு ம்ருதயுவே நம: என்று மருத்யுவுக்கு ம்ருத்யுவாக நாம் அவனை பாவிக்க வேண்டும். **அவன் தான்** ஒவ்வொரு தடவையும் நம்மை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறான்.

(வளரும்)

# பயம் கலந்த மரியாதை!

**என்** அப்பா 85ம் ஆண்டு 'கல்கி'க்கு அனுப்பிய ஒரு சிறுகதை தேர்வு செய்யப்படாமல் திரும்பி வந்ததற்கு மிகவும் மகிழ்ச்சியடைந்தார்! நம் நாட்டின் பண்பாட்டுக்கு எதிரான கதை என்ற காரணத்தோடு கல்கி திருப்பியனுப்பியதில், அதன் உறுதியான நிலைப்பாடு கண்டு அதிசயித்துப் போனார்.

வெறும் பரபரப்புச் செய்திகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்காமல், பலதரப்பட்ட விஷயங்களையும் ஒரே புத்தகத்தில் அள்ளி வழங்குவதுதான் 'கல்கி'யின் தனித்தன்மை. இதன் நடுநிலையான விமர்சனங்களால் எல்லோருக்குமே கல்கி மீது ஒரு பயம் கலந்த மரியாதை உண்டு.

-'அண்ணி' மாளவிகா




• படம்: ஸ்ரீஹரி

Registered with the Registrar of Newspaper of India under No. 10410/57 * Regis
No. TN/PMG (CCR) 572/03-05 * Licensed to post without prepayment und
PMG's Licence No. WPP 358/03-05 * Registered as a Newspaper in Srilanka